THE OOLIAN Reg. No. M. 1509

# ஊழியன்

மலர் 14. இதழ் 48

தேசீய சித்திர வாரப்பத்திரிகை




ஹாலிவுட் பிரபல நடிகையாகிய லிலியன் ஹார்வி. "இன்றிரவு வாழ்வோம்" என்ற படத்தில் இவ்வாறு தோற்றுகிறார்.

## உள்ளுறை.

### முக்கிய விஷயங்கள்.



31—5—35

# ஊழியன்

ஆசிரியன்—ராய. சொக்கலிங்கன்.

மலர் கசு. சென்னை, யுவ ஹு வைகாசிமீ 18உ வெள்ளி (31-5-1935) இதழ் சஅ

*இந்தியத்தாய் முடிசூடி எழிற்சிங்கா*
*தனமேறி ஈடிலாது*
*சொந்தவா சேபுரியத் துயர்போக்கி*
*யாவருமே சுகவாழ் வெய்த*
*இந்நிலம் வந்தவருள் இலைபிறப்பில்*
*இழிவுயர்வென் இயற்கை ஓங்க*
*நந்தலிலா ஊழியமே நான்கொண்டே*
*நல்லனவெந் நாளும் வாழ்க !*

## அபிசீனிய சமரச வைபவம்

சில மாதங்களாக அபிசீனியாவுக்கும் இத்தாலிக்கும் ஆப்ரிக்காவில் நடைபெற்று வந்த யுத்தத்தைப்பற்றி ஊழியன் நேயர்கள் அறிவார்கள். இப்போது அவ் யுத்தத்திற்கு ஒரு தாற்காலிக சமரசம் ஏற்பட்டிருப்பதாக சர்வதேச சங்கச் செய்தியொன்று கூறுகிறது. அந்த சமரசத்திற்கு முக்கியமாக முன்னின்று முயன்றவர் காப்டன் ஈடன் ஆம். இவரை ஆங்கிலேயரும் பிறரும் பாராட்டுவதாகச் செய்தி. இவர் சமரசத்தில் என்ன அபூர்வ காரியத்தைச் செய்து முடித்து விட்டார் என்றால் ஒன்றுமில்லை. இன்று யுத்தம் தாற்காலிகமாக நிறுத்தப்பட்டுள்ளது. இருசாராரும் சமரசத்திற்கு ஒப்புவதாகக் கூறியுள்ளார்கள். அப்பால் 1928-ம் வருடம் இரு நாடுகட்கு மேற்பட்டுள்ள உடன்படிக்கைப்படி தலா இரு பிரதிநிதிகளை விட்டு சமாதானம் பேச இணங்கியுள்ளார்கள். பிறகு நான்கு பிரதிநிதிகளும் சேர்ந்து பேசும் பேச்சு ஒரு குறிப்பிட்ட காலத்திற்குள் முடிவடையவில்லையானால் பின் இரு தேசத்தையும் சேராத மூன்றாவது ஒரு தேச உறுப்பினரை மத்தியஸ்தராக வைத்து ஐவர் சேர்ந்து சமரசம் பேசுவர். அதற்காக (அதாவது ஐந்தாவது ஒருவரைக் கண்டுபிடிக்க) தேவைப்பட்டால் சர்வதேச சங்கம் ஒரு கூட்டத்தைக் கூட்டிக்கொள்ளும். இதுதான் தற்போதிய சமரச ஒப்பந்தத்தின் சாரம்.

இதனை துருவிப் பார்த்தால் உருப்படியான காரியம் எதுவேனும் நடைபெற்று விட்டதாகக் கூறிவிட முடியாது. எதிரெதிர் அபிப்பிராயம் கொண்ட இருதேசப் பிரதிநிதிகளை சமாதானம் பேசவிட்டால் எவ்வாறு ஒரு மனப்பட்ட முடிவு ஏற்படுமென்று நம்புவது? அவ்வாறு முடிவு ஏற்படா விட்டால் புதிதாக ஒருவரை மத்தியஸ்தராக நியமிக்கலாம் என்று சர்வதேச சங்கத்தார் கூறுகிறார்கள். அந்த மத்தியஸ்தரை ஏன் இப்பொழுதே நியமித்துவிடக் கூடாது? இதனை நினைக்கும் போதுதான் இச் சமரசத்தில் ஏதோ இரகசியமொன்று பதுங்கி யிருப்பதாக நினைக்கிறோம்.

நன்கு நிதானித்தால் சமரசப் பேச்சினால் ஒரு பலனும் மேற்படப்போவதில்லை. இருசாராரும் சமரசம் பேசிக் கொண்டிருக்கையிலேயே போதிய அளவு ஆயுதங்களை சேகரித்து விடக்கூடும். பொருளாதார பலமும் தேடுவர். ஒத்தாசைக்கு எவரேனும் வசதியிருந்தால் அவரையும் அழைத்துக் கொள்வர். அப்பால் யுத்தத்தை ஆரம்பிப்பர். இதைத் தவிர இந்த தாற்காலிக சமரசத்தால் ஏதேனும் ஏற்படுமா?

சினோர் முசோலினி இச் சமரசம் ஏற்பட்ட பிறகும் ஆப்ரிக்காவுக்குப் படையனுப்புவதை நிறுத்தவில்லையாம். ஈராயிரம் ராணுவ வீரர்கள் சகல முஸ்தீபுகளுடனும் கிழக்காப்ரிக்காவுக்குச் சென்றிருக்கிறார்கள். இன்னும் படையனுப்ப நேபில்ஸில் ஏற்பாடு செய்யப்படுவதாக செய்தி. இது சம்பந்தமாக முசோலினியிடம் கேட்டதில் சமரச

Bleed through

மேற்பட்டு விட்டால் ராணுவம் திரும்ப அழைக்கப்பட்டு விடுமென்று பதில் கூறினாராம். சமரசம் சாத்தியம் என்று அவருக்கே தோன்றியிருந்தால் படைகளை ஏன் அனுப்பவேண்டும்?

பொதுவாக அபிசீனியாவை விழுங்கி யொரு பெரிய சாம்ராஜ்யத்தை நிலைநாட்ட வேண்டுமென்பது முசோலினியின் பேரவா! இந்த ஆசையைக் குறிக்கு முகத்தால்தான் அவர் ராணுவத்தை எவ்வழியிலும் பெருக்கி உலக சமாதானத்தை நிலைநாட்ட வேண்டுமென்று பட்டவர்த்தனமாக சின்னாட்களுக்கு முன்பு கூறினார். இந்த முசோலினியிடம், ஹிட்லர் ஏதோ உடன்படிக்கையை மீறிவிட்டார் என்று கத்துகின்றவர்களெல்லாம் தம் வாயைத் திறக்கின்றார்களில்லை. காரணம் முசோலினியிடமுள்ள பயமே. அவரிடம் தான் ஐரோப்பிய அரசியலின் திறவுகோல் இருக்கிறது. அவர் நினைத்தால் எதுவும் செய்ய ஏலும் இன்றைய ஐரோப்பாவில். ஆகவே ஹிட்லருக்கு எதிராக நிறைவேற்றிய தீர்மானங்களும், விட்ட வாக்கம்புகளும் முசோலினி மாட்டுச் செல்கின்றதில்லை. இந்த நிலைமையில் பிரான்ஸ், இங்கிலாந்து ஆகியவைகளெல்லாம் பேசும் நியாயம் அபிசீனியாவுக்குச் சாதகமானதாகவோ நியாய உணர்ச்சியுடையதாகவோ இருக்க முடியுமா? சர்வதேச சங்கத்தால் ஏதேனும் சாதித்ததாக இருக்கட்டுமென்றுதான் தற்போது ஒரு பாசாங்கு சமாதானத்தைச் செய்திருக்கின்றார்கள். இன்றேல் முசோலினி தம் படையை ஒழுங்காகத் திரட்டிக்கொள்ளும் வசதியை யளிப்பதற்கு செய்யப்பட்டிருக்க வேண்டும்.

அபிசீனியாவைப் பொறுத்த வரையில் அது அழிக்கப்பட்டு விட்டால் ஐரோப்பியர் கண்ணீர் விடப் போவதில்லை. அவர்கட்கு உலகமெல்லாம் வெள்ளையர் மயமாகக் காண்பதிலேயே திருப்தி. கறுப்பர்கள் எக்கேடு கெட்டாலும் சந்தோஷமே. ஆனால் பிரான்ஸ், பிரிட்டன் முதலிய நாடுகளெல்லாம் சும்மா விருக்க, இத்தாலி மட்டிலும் கொள்ளையடித்து வளர்வதென்றால் சற்றுப் பிடியாது. ஆதலால்தான் அவர்கள் தலையிடுகின்றார்கள் போலும்!

இவ்வளவு பொறுப்பற்ற முறையில் சமாதானம் ஏற்பட்டால் அபிசீனியா என்ன நன்மையைக் காணும்? இத்தாலியைப் போலதானும் ஆயுதங்களைச் சேர்த்து விடலாமென்றால் அதற்கு அந்நாட்டுக்குச் சொந்தமான உற்பத்திசாலைகளில்லை. மேனாட்டிலிருந்தே எந்தப் படையும் வாங்கியாக வேண்டும். அவ்வாறு வாங்குகையில் "சப்ளை" செய்யலாகாதென்று உறுமுகிறார் முசோலினி! ஆதலால் அபிசீனியா கதி யாதாகும்? இந்த பரம தொல்லையை நினைத்தால் மேனாட்டு வெள்ளையர் தொல்லை வர்ண ஜாதியார்களை என்னபாடு படுத்துகின்றதென்பது புலப்படாமற் போகாது. எனவே கீழ்நாட்டார் ஜாதிமத தேச பேதமின்றி சர்வதேச சங்கமமைத்துப் பழிக்குப் பழி வாங்குவதே தகுதி!

---

குழந்தை:—எல்லாப் பொம்மைகளும் எனக்கு வேண்டும்.

(ஹிட்லர் எந்தத் தேசமும் சேகரிக்கும் ஆயுதத்தைத் தாமும் சேகரிப்பார் என்று கூறுவதைக் கேலி செய்து ஒரு ஆங்கில சித்திரக்காரர் இப்படத்தை எழுதி யிருக்கிறார்.



# இடி முழக்கம்

## மந்திரி பதவி பற்றி ஸ்ரீ சத்தியமூர்த்தி

காங்கிரஸ்காரர்கள் சர்க்காரோடு ஒத்துழைக்க மாட்டார்கள் என்பதை ஏற்ற தருணமாகக் கொண்டு சில தகுதியற்றோர் உத்யோகம் புகுந்து வயிறு வளர்த்து வந்தார்கள் என்பது தமிழ் நாட்டார் அறியாததல்ல. இப்போது காங்கிரஸ் சட்டசபை புகுந்து உத்தியோகம் ஏற்றுக்கொள்ளலாமென்ற நிலைமைக்கு வந்திருப்பதால் அந்த தங்கலமிகள் நாக்கைச் சுழற்றிக்கொண்டு கொட்டாவி விடுகின்றனர். சிற் சிலகால் அவர்கள் 'காங்கிரசார் வேலையை ஒப்புக்கொள்ளலாமா? என்றும் வினவுகின்றனர். இவ் வினாவுக்கு காங்கிரஸ்காரர்கள் இந்தியர்களல்ல வென்பது பொருளா? அல்லது சம்பளம் வாங்குவது தகுதியற்றது என்பது பொருளா வென்பது விளங்கவில்லை. இது பற்றி நாம் அதிகம் எழுதப் புகவில்லை. சமீபத்தில் தமிழ் நாட்டுத் தலைவர் திரு. சத்தியமூர்த்தி பம்பாயில் ஒரு பத்திரிகை நிருபரிடம் சில கூறியுள்ளார். அதில் உத்தியோகம் வகிக்கலாமா வென்பார்க்கு போதிய அளவு பதிலிருக்கிறதென்று நினைக்கிறோம். திரு. சத்தியமூர்த்தி கூறியதாவது:—

நான் காங்கிரஸினிடம் மாறாத விசுவாசம் கொண்டுள்ள ஒரு ஊழியன். என் சொந்த அபிப்பிராயங்களை எப்பொழுதுமே நான் காங்கிரஸின் ஆக்ஞைக்குட் படுத்தியிருக்கிறேன். அதிலிருந்து விலகி நடக்க வேண்டிய அவசியமெனக்கேற்படவில்லை.

நான் மந்திரி பதவி வகிக்க விரும்பியிருந்தால் பதினைந்து வருஷங்களுக்கு முன்பாக அவ்விருப்பம் நிறைவேறியிருக்கும். காங்கிரஸ் தீர்மானித்தாலல்லாமல் நான் உத்தியோக மேற்க மாட்டேன். சட்டசபைகளிலும் மந்திரி சபைகளிலும் காங்கிரஸ் புகுவதால் சுயராஜ்யம் துரிதப்படும். உள்ளிருந்தே நாம் போராட்டத்தை நடத்த வேண்டும். என்ன நடக்கப் போகிறதென்று தெரியாத நிலைமையில் இதைப்பற்றிப் பேசுவது பொருந்துமா வென்பது அபிப்பிராயத்தைப் பொறுத்த விஷயம். சர்க்கார் தாஸர்கள் உள்ளே இருக்கும்படி காங்கிரஸ் விடாதென்பது நிச்சயம். காங்கிரஸ்காரர் மந்திரி சபை அமைப்பதென்றால் எளிதல்ல. அவர்கள் மாதம் ரூபாய் 500-க்கு மேல் சம்பளம் வாங்கிக் கொள்ள மாட்டார்கள். மந்திரி சபைக் கூட்டத்திற்குப் போகும் போது காங்கிரஸ்காரர் ராஜினாமாக் கடிதத்தைக் கையில் எடுத்துக் கொண்டே போவார்கள்.

இதில் சில வாக்கியங்கள் காந்திஜீ உபதேசத்திற்கு மாறானவை. எனி

ரங்கூன்

பஜார் பருவம்.

ரங்கூன், மே 28,

| | |
|---|---|
| படகு நெல் | 96/98 |
| ரயில் நெல் | 96/98 |
| பெரிய மில் ஸ்பெஷல் | 235/ |
| நசேன் சிறிய மில் | 245/247-8 |
| நசேன் எஸ். க்யூ. | 252-8/ |
| மீடான் பஜார் | 262-8/ |
| மீடான் எஸ். க்யூ. | 267-8/ |
| ரொடி புழுங்கல் அரிசி | 260/267-8/ |
| மில் சார் | 250/257-8 |
| முழு புழுங்கல் | 245/250 |
| யநெலே | 265/275 |

னும் தன் கருத்தை திரு. ஐயர் கூறுவதால் விட்டுவிடுவோம். இது எவ்வாறு காங்கிரஸ்காரர்கள் உத்தியோகம் வகிப்பர், அவ்வாறு வகிப்பதின் நோக்கமென்ன வென்பதை விளக்குவதால் அவ்வழிக் கேள்வி கேட்பார்கட்கு ஒருவிதப் பதிலாகிறது. வெளியே போராடிய காங்கிரசார் சட்டசபை புகுந்து போராடுவதோடு மந்திரி சபை அமைத்தும் போராடினால் வலுவே தவிர நொய்மையல்ல. ஆனால் உத்தியோகத்தில் மயங்கி விடுவார்களானால் மோச மேற்பட்டுவிடும். ஆகவே உத்தியோக மேற்றாலும் தாம் காங்கிரசார் என்ற கருத்தை ஏந்தி யிருக்க வேண்டுவது அவசியம்.

---

# சினிமாச் செய்தி

"வசி"

### நள தம்யந்தி

எஸ். எஸ். மணி டாக்கீசாரால் தயாரிக்கப்பட்டு வெளி வந்திருக்கிறது. படம் நல்லமாதிரியில் அமைந்திருக்கிறதென்று சொல்லப்படுகிறது. நளனைப் பற்றிய சினிமாப் படம் இதுதான் முதலாவது. டிரேட் ஷோ (வர்த்தகக் காட்சி)யின் பின் நம் அபிப்பிராயம் எதிர்பார்க்கப் படலாம்.

### வத்சலா கல்யாணமும்

வரப்போவதாக வதந்தி. இது பற்றிய செய்தி நன்கு தெரியவில்லை. தெரிந்ததும் விளக்கமாக எழுதப்படும்.

### பதி பக்தி

சீக்கிரத்தில் மனோரமா பிலிம் கம்பெனியாரால் படம் பிடிக்கப் படுமாம். மதுரை ஒரிஜினல் பாய்ஸ் கம்பெனியார் இதில் ஆக்ட் செய்வார்கள் என்று சொல்லப்படுகிறது.

### ராஜாம்பாளில்

திரு. பந்துலு கதாநாயகனாக ஆக்டு செய்கிறார் என்று சென்ற வாரம் பிரசுரிக்கப்பட்டிருந்தது. அது தவறு என்றும் கதாநாயகனாக திரு. ஸ்ரீநிவாசன் ஆக்டு செய்கிறாரென்றும், திரு. பந்துலு வேறு பாத்திரமாக வருகிறார் என்றும் ராஜாம்பாள் கம்பெனியார் அறிவிக்கிறார்கள்.

### ராமதாஸ்

பெரும்பான்மையும் வேலை முடிந்து விட்டது. வர்த்தகக் காட்சியை அண்மையில் எதிர்பார்க்கலாம். படம் மிகக் கவனமாக பிடிக்கப்பட்டிருப்பதாகச் செய்தி.

### லோடஸ் பிக்சர்

கம்பெனியார் ஒவ்வொரு முக்கியமான ஊரிலும் வர்த்தகக் காட்சிகள் நடத்துவதென்று முடிவு செய்திருக்கிறார்கள். ஜூன் 2-ந்தேதி முதல் முறையே காரைக்குடி, திருநெல்வேலி பொள்ளாச்சி, கோயமுத்தூர் ஆகிய விடங்களில் அக் காட்சிகள் நடைபெறப் போவதாக அறிவிக்கிறார்கள்.

---

## வரத-சரஸ்வதி

வரத சரஸ்வதி இசைப் பாட்டுகளுடன் அடுத்த வாரம் வெளிவரும்.

லோடஸ் பிக்சர்ஸ் கம்பெனியாரின்

# ஒரிஜினல் சாரங்கதரா

காரைக்குடி ஸ்ரீ மீனாக்ஷி டாக்கீஸில்

ஜூன்-மீ 2உ முதல் காட்டப்படும்.

திருப்பூரில் மஹாஜனம் பொருந்திய V. S. Srinivasa Sastriar அவர்கள், திவான் பஹதூர் M. ராமசந்திர ராவ் இவர்கள் முன்னிலையிலும், போதாவின் கீழும் சேலத்தில் திவான் பஹதூர் மாஜி ஹைக்கோர்ட் ஜட்ஜ் சுந்தரம் செட்டியார் அவர்கள் முன்னிலையிலும் காண்பிக்கப்பட்டு சிறப்பாய் பாராட்டப்பட்டது.

---

நீங்கள் எப்பொழுது உங்கள் குடும்பத்துடன் இந்த அரிய இணையற்ற தமிழ் பேசும் படத்தைக் கண்டுகளிக்கப் போகிறீர்கள்? உங்கள் டவுனில் பிரபல சினிமா கொட்டகையில் ஆரம்பதினத்தை எதிர்பாருங்கள்.

புது வருஷத்து நற்செய்தியாய் பிரசுரித்த

எங்களுடைய அடுத்த தமிழ்ப் பேசும் படம்

## பக்த பட்டிணத்தார்

இந்திய படங்களுள் மேம்பட்டதாகும்

ஏன்?

விவரங்களை எதிர்பாருங்கள்.

விஜயா & Co., கதீட்ரல் - - மதராஸ்.



விசேஷ அறிவிப்பு

## சகுந்தலா பிலிம்ஸ் லிமிடெட்,

விநோத ரத்னாகர நாடகசிந்தா ரத்ன கர்னாடக நாடக காண்டீரவ

G. H. வீரண்ணாவின் (குப்பி)

ஸ்ரீ சென்ன பஸ்வேஸ்வர ஸ்வாமி டிராமாடிக்

கோஷ்டியாரைக் கொண்டு அவர்களுடைய சிறந்த

# "சதாரம்" என்ற நாடகத்தை

ஒரு உயர்தர பேசும் படமாய் தயாரிக்க ஏற்பாடு செய்திருக்கிறார்கள்.

குப்பி கம்பெனி "சதாரம்"

அதிக பிரக்கியாதி பெற்ற தென்பதை மறந்து விடாதீர்கள்.

G. H. வீரண்ணா, அஸ்வத்தம்மாள், ஸ்வர்ணம்மாள், சுந்தரம்மாள், முராராச்சார்

முதலிய சிறந்த நடிகர்களைக்கொண்டது

இப்போது தயாராகி விட்டது!

இவ் வருஷத்திய அதி உன்னத பேசும் படக்காக்ஷி

# ஞான-சௌந்தரி

(தமிழ்)

மிஸிஸ். சரோஜினிதேவி — மிஸ். அஞ்சுகம்

ஸ்ரீ. ஸி. வி. வி. பந்துலு — ஸ்ரீ. ஸ்ரீனிவாசராவ் பி. ஏ.

முதலிய நாடக ரத்தினங்கள் சிறப்பாக நடித்தது.

தேர்ந்தெடுத்த திவ்யமான பாடல்கள்—மனதை உருக்கும் காட்சிகள் நிறம்பியது.

ஸ்ரீ. A. நாராயணன், B. A. மேற்பார்வையில் ஸ்ரீ. ராஜா சந்திரசேகர் டைரக்ட் செய்தது.

பிலிம் சொந்தக்காரர்களும், வெளியிடுவோரும்:

சகுந்தலா பிலிம்ஸ் லிமிடெட், :: கோயமுத்தூர்.

# டால்ஸ்டாயின் காதல் வாழ்க்கை

## துன்பத்தில் புலமை; புலமையில் இன்பம்

"கமுதி"

ருஷ்யப் பெரும் ஞானியாகிய கௌண்ட் லியோ டால்ஸ்டாய் என்பவரைப்பற்றி அறியாதாரிருக்க முடியாது. நவீன ருஷ்யாவின் விதை போட்டவர் இவர் என்று கூறலாம். பொதுவுடமைப் பிரசாரம் செய்த லெனினின் முன்பு யாண்டும் புகழ் பெற்று வந்த இவர் மாபெரும் தேசாபிமானி; புத்தரை போன்ற அறக்கடல்; அகிலமும் தம் சகோதரம் என்று கருதும் மெய்ப் பொருளுணர்ந்தவர். அன்புடமை, சகோதரத்துவ உணர்ச்சி, எழிய வாழ்வு முறை ஆகிய மும்மணிகளை உலகைப் பிரகாசிக்கச் செய்யுமென்று வாழ்க்கை பூராவும் போதித்து வந்திருக்கிறார். போர் என்பது பிரயோஜன மற்ற ஒரு உத்வேக மென்றும் அதனால் எய்தக் கூடிய நன்மை எதுவுமில்லை யென்றும் வாழ்வு பூராவும் பேசி எழுதி வந்திருக்கிறார். எதைச் சொல்வாரோ அதை வாழ்வில் காட்டுவதில் தவறுவதில்லை. கருணை வடிவமாயிருந்த இவர், தொழிலாளர் தோழராகவும் ஏழை பங்காளராகவு மிருந்தார். அரச போகத்தையும், திரண்ட ஆஸ்தியையும் தேசத்தின் பொருட்டு துறந்து ஏழைகளோடு ஏழையாய் வாழ்ந்து வந்த இவர் பணக்காரர் கொடுமைக்கும் அரசாங்க கோபத்திற்கும் ஆளானார்; எனினும் அஞ்சவில்லை; தன் போதனையைக் கைவிடவில்லை. இவர் பெரிய நாவலாசிரியர்; எழுத்தாளர். மகாத்மா காந்தி இப்பெரியாரையே தம் குருவென்று பன்முறை சொல்கிறார். இங்கு லியோ டால்ஸ்டாயின் கல்யாணத்தைப்பற்றி எழுதப்பட்டிருக்கும் கட்டுரையைத் தருவோம் :—

கௌண்ட் லியோ டால்ஸ்டாய் தம் முப்பதாவது வயதில் ஏற்பட்ட மனச் சஞ்சலத்திற்குக் கல்யாணமின்மையே காரணமென்று கண்டு பிடித்தார். எனவே கல்யாணம் செய்வதற்கு ஆயத்தமானார். இக் கல்யாண ஆயத்தத்தைப்போல் நீளமான சங்கதி உலகில் மிகச் சுருக்கமே காண முடியும்.

1859-ம் வருடம், (வருடப் பிறப்பன்று) டால்ஸ்டாய் "இவ்வருடத்தில் மணம் செய்து முடிக்கவேண்டும்; இன்றேல் ஒருபோதும் மணமே வேண்டுவதில்லை" என்று உறுதி கொண்டார். ஆனால் 1862-ம் வருடம் வரையிலும் கல்யாணம் நெருங்கி வந்து விடவில்லை.

1862-ம் வருடத்தில் ஸ்ரீமதி பீஹர்ஸ் என்ற ஒரு டாக்டரின் மனைவி டால்ஸ்டாயின் சொந்த நிலமாகிய யாஸ்னயா போலியானா வென்ற விடத்திற்கு தம் மூன்று குழந்தைகளுடன் வந்து குடியேறினர்.

டால்ஸ்டாய்க்கு மேற்படி குழந்தைகள் மூன்றையும் சிறுபிராயம் முதல் தெரியும். நாளடைவில் அவர் சோன்யா மீது கண்செலுத்தி, கருத்தை நாட்டி, காதல் கொண்டார். அப்போது சோன்யாவுக்கு வயது பதினெட்டு.

டால்ஸ்டாய் அப்போது டயரியில் (தினசரிக்குக் குறிப்பில்) எழுதியதாவது:—"நான் காதலில் மூழ்கியிருப்பது சாத்தியமில்லை என்று எண்ணினேன். ஆனால் இப்போது காதலில் மூழ்கியிருக்கிறேன். நான் ஒரு கிறுக்கன். இப்படியே இருந்து கொண்டிருந்தால் என்னையே சுட்டுக் கொள்வேன்."

அடுத்த நாள் அவர் குறிப்பில் எழுதியதாவது:—

"நாளைக் காலையில் அவளிடம் எல்லாம் முதல் தடவையாகக் கூறிவிடுவேன். அல்லது என்னைச் சுட்டுக் கொள்வேன். ........ஏ ஈசா! நான் இறக்க எவ்வளவு பயப்படுகிறேன்! இவ்வளவு பெரிய இன்பமுண்டென்பதை நம்பவே முடியவில்லையே."

இங்ஙனம் சில நாட்கள் ஆன பிறகு தான் டால்ஸ்டாய்க்கு சோன்யாவிடம் தன் விருப்பத்தைக் காண்பிக்கும் கடிதமொன்றைக் கொடுக்க முடிந்தது. அவர் கடிதம் கொடுத்ததும் ஏற்றுக் கொள்ளப்பட்டார். பின் சுமார் ஒரு வாரம் காதல் வாழ்வு நடைபெற்றது.

அக்காதல் வாழ்வு மிக விந்தையானதாகும். அன்னா கரினினா, குருட்ஜர் ஜொனெட்டா என்ற நாவல்களில் அவர் எழுதி யிருப்பதுபோல அவர் தம் புதுக் காதலி தம் தினசரிக் குறிப்பைக் கண்டிப்பாக வாசித்து முடிக்கவேண்டுமென்றும், தாம் முன்னடியே வேறு சிலரிடம் காண்பித்திருக்கும் காதலைத் தெரிந்து பொறுத்துக் கொள்ளவேண்டுமென்றும் கேட்டுக் கொண்டார்.

சோன்யாவை நாடும்போது அவருக்கு ஒரு அடிமைப் பெண்ணினிடம் பிறந்த நான்கு வயதுக் குழந்தையொன்று இருந்தது.

சோன்யா அவ்வாறே டால்ஸ்டாயின் தினக் குறிப்பைப் படித்தாள். படித்ததும் அவளுக்குப் பெரிய திகில் ஏற்பட்டு விட்டது.

கல்யாணமாகி இரண்டு வாரமானதும் சோன்யா அவள் டயரியில் எழுதியதாவது:—நான் அவரது களங்கங்களையெல்லாம் காண்கின்றேன். ஆதலால் மிகவும் துன்பப் படுகிறேன்.

இவ்வாறு ஆரம்பித்தது டால்ஸ்டாயின் திருமணம். இம் மணம் 48 வருடங்கள் சென்று, படித்தார் உலகை இரண்டாகப் பிரித்துவிட்டது: இரு பகுதி மனைவியை ஆதரிப்போர் என்று ஒரு பகுதி; கணவனை ஆதரிப்போர் என்பது ஒரு பகுதி என்பனவாம்.

மேற்படி கல்யாண வாழ்வில் புருஷன் ஓர் மேதாவி; உண்மைக் குழைப்பவர். மனைவி பிடிவாதமான குணமுடைய ஒரு பெண்; சுருங்கிய புத்தி சாதுரியமுடையவள்.

சோன்யா தன் டயரியில் கல்யாணமாகி 18 நாள் சென்றதும் அடியில் வருமாறு எழுதினாள் :—

"என் கணவர் நோயுற்றவர்; துர்குணமுடையவர்; என்னைக் காதலிக்கின்றாரில்லை. நாளுக்கு நாள் அன்பு குறைந்து கொண்டே வருகிறது. ஆனால் நானோ நாட் போகப் போக அவர் மீது காதலை வளர்த்துக் கொண்டே வருகிறேன்".

இரண்டு மாதங்கட்குப் பின்பு சோன்யா எழுதியதாவது:—

"நான் என் கணவர் எழுதிய புத்தகங்கள் சிலவற்றின் தொடக்கங்களைப் படித்திருக்கிறேன். அவ்வாறு நான் படித்தபோதெல்லாம் அவர் காதலையும் பெண்களையும் பற்றிக் கூறுவது மனதைப் புண்படுத்துகிறது. அத்தனையும் போட்டு நெருப்பை மூட்டிவிடலாமென்று நினைக்கின்றேன். நான் அவர் புத்தகங்களைப் பொருட்படுத்தலில்லை.

இவ்வாறு காதலி எழுதினாலும் காதலன் கல்யாணம் தன்னை சாந்தப்படுத்திக்கொண்டு வருவதாக உணர்ந்தார். பொதுப்படையாக வாழ்வின் கருத்தென்னவென்று ஆராய்வதினின்றும் அவரை இழுத்துவிட்டது குடும்ப வாழ்க்கை. அவர் நிரம்ப எழுதத் தொடங்கினார். அவ்வெழுத்துக்களே அவரைப் பெரியவராக்கின.

டால்ஸ்டாய் தம்பதிகளை இரு விஷயங்கள் பலமாகக் கட்டிப் பிடித்தன. அவை இருவருக்கு மிருந்த காதலும் குழந்தைப் பேறுமாகும்.

கல்யாணமான மறு வருடத்தில் தான் டால்ஸ்டாய் "போரும் சமாதானமும்" என்ற பெரிய நூலை எழுதி ஆரம்பித்தார். அந்நூல் உலக இலக்கியத்தில் இடம் பெற்றதாகும். டால்ஸ்டாயின் இலக்கியங்களுள் சிறந்தது மதுவே. அதனை எழுதும்போது டால்ஸ்டாய் தன் மனைவியிடம் "நான் புதுப் பிறப்பு எடுக்கிறேன்" என்று கூறிக்கொண்டே இருந்தாராம்.

அப்புத்தகம் எழுதியபோது தம் வர்ணனைகளில் உண்மை மிளிர்வதற்காகப் பற்பல இடங்களைச் சுற்றி பார்த்தார். அப்பிரயாணத்தில் அவர் நகரங்கள் மனித வாழ்க்கைக்கு ஏற்ற இடங்களன்றென்று கண்டார். கிராம வாழ்வே அவருக்கு இன்பமளித்தது. காரணம் அவருக்கு கிராமங்களில் தான் மக்களுடன் நெருங்கிப் பழக முடிந்ததாம். கிராமங்கட்குச் சென்றபோது பரபரப்பான இடங்களில் படுத்து உறங்கியும், எழ்மையான ஆடைகள் அணிந்தும் ஜனங்களோடு சேர்ந்து வாழ்ந்து வரலானார்.

அவரது குழப்பம்

டால்ஸ்டாய் எழுத்திற்கு அடிமையானார். மண் வெட்டிக்கும் கோடரிக்கும் அடிமையானார். கிரீக் பாஷை பயில்வதில் அடிமையானார். கிரேக்கர்களும் கிருஸ்தவர்களும் சொல்லும் துறவும் தங்நலத்தியாகமும் அவருக்குள் போராடின. அதனால் அவர் நோயுறலானார். இத்தருணத்தில் சோன்யா எழுதியதாவது:— சென்ற குளிர் காலத்தில் லெவரயும் நானும் நோய் வாய் பட்டிருந்தபோது ஏதோ ஓர் நிழல் எங்கட்கிடையில் புகுந்து இருவரையும் பிரித்து விட்டதாகக் கண்டேன்.

டால்ஸ்டாய் தம் டயரியில் எழுதியதாவது :—வருத்தத்தைக் கொடுக்கும் குழப்பம். என்னால் அடக்க முடியவில்லை, நான் எதற்கும் காரணம் கண்டு பிடிக்கவே முயல்கின்றேன். அது ஒரு மூடத்தனம். குழப்பத்திற்கெல்லாம் முக்கிய காரணம் காதல் நிரம்பிய ஒரு மனைவி இன்மையே. நான் அவளை காதல் நிரம்பியவளாகச் செய்யவேண்டும்; செய்வேன்; கடவுள் காப்பாற்றுவார்.

அன்னா காரினினா என்ற நாவலை எழுதிய போதெல்லாம் வாழ்வில் பொருளில்லை யென்று அவர் கண்டிருந்தார். தன்னை அழித்துக்கொள்ள வேண்டுமென்று பன்முறை நினைத்தார். தன்னையே சுட்டுக்கொள்ள நேரிடுமென்று அக்காலத்தில் அவர் வேட்டையாடச் செல்வதில்லை.

அக்காலத்தில் அவருக்கு சிறிது ஆறுதல் அளித்தவர்கள் ஏழை ருஷ்யர்கள்தாம். மதம் அவரிடம் பலமாக இடம்பெற்றிருந்த ஆதலால் நாளடைவில் எழிய வாழ்வு எழிய நடைகட்கு ஆளாகிக் கொண்டிருந்தார்.

சோன்யா முப்பத்து நான்கு வயதை நண்ணியபோது ஆறு (உயிர் வாழும்) குழந்தைகளின் தாயானள். அப்பால் கொஞ்ச நாள் டால்ஸ்டாய் பெரிய வேதாந்தியாகவும் தத்துவ போதகராகவுமாகி விட்டார். எனவே அவரது குடும்ப வாழ்க்கை இன்பம் கொடுத்த பாடில்லை. அவர் அக்காலத்தில் "சொத்தே (ஆஸ்தியே) எல்லாவித துன்பங்கட்கும் ஆணி வேர்" என்று கூறி வந்தார். இவ்வாறு அவர் தத்துவங்களில் வாழ்ந்தாரே அன்றி விரத நடைமுறை வாழ்வு வாழவில்லை

இந்த நிலைமையில் டால்ஸ்டாய் குடும்பத்தை விட்டு நீங்க முயன்றார். சோன்யாவுக்கு அவ்விஷயம் தெரிந்து விட்டது. அவள் தன் கணவரின் வளர்ந்து வரும் பொறுப்பைக் கண்டாள்.

அவள் அப்போது எழுதியதில் "என் கணவரின் போராசை குடும்பத்தை விட்டு நீங்கிவிட வேண்டுமென்பதாகும்" என்று குறிப்பிட்டார்.

அதேபோது டால்ஸ்டாய் எழுதிய டயரியில் அடியில் வரும் வாக்கியங்களைக் காண்கின்றோம். "வீட்டில் வாழ்வது நிரம்ப வேதனையைக் கொடுக்கிறது. என் குடும்பத்தினிடம் அநுதாபம் காண்பிக்க முடியவில்லை. 'அவர்கள் செய்யும் யாவும், அவர்களுடைய எல்லா பொருட்களும் நிர்பாக்கிய உருவங்கள்' என்று மதிக்கின்றேன். ஆனால் துறந்து அவர்களிடம் கூற முடியவில்லை."

ஒரு நாள் ஒரு குழந்தை பிறப்பதற்குச் சற்று முன்பு மனைவியிடம் வெறுப்புக் கொண்டு, தனக்கு வேண்டிய சில சாமான்களை ஒரு பையில் போட்டுக் கட்டிக் கொண்டு டால்ஸ்டாய், "சோன்யா! நான் இனி ஒரு போதும் வரமாட்டேன்" என்றார். உடன் சோன்யா கெஞ்சிப் பணிந்து தான் ஏதேனும் தவறு செய்திருந்தால் பொறுத்துக் கொள்ளவேண்டுமென்று இரந்தாள். டால்ஸ்டாய் ஒன்றும் பேசவில்லை.

இந்த சம்பவத்திற்கு ஒரு மாதத்திற்கு முன்பு ஒரு நிகழ்ச்சி ஏற்பட்டது; அதுபற்றி அவர் எழுதியதாவது:—என்னுடைய மாணத்தில் அவள் ஒரு மைல் கல்லாக விருந்தாள். ஆனால் என்னிடம் வந்து கெஞ்சுகிறாள்.

இவ்வாறே அவரது குடும்பவாழ்க்கை முழுதும் நிரந்தர கவலை யுருவமாயிருந்ததில்லை. சிலகால் அவர் சந்தோஷம் கொண்டு குழந்தைகளோடு விளையாடிக் கொண்டிருந்திருக்கிறார். குழந்தைகளுடன் பியானோ வாசிப்பதும், ஓடி விளையாடுவதும், காகிதங்களில் விளையாட்டு நிகழ்த்துவதும் பலமுறை நடைபெற்றிருக்கிறது. இத்தகைய இன்பத்தின் கீழிலும் துன்ப ஆறு ஓடிக் கொண்டிராமலில்லை. பன்முறை டால்ஸ்டாய் "அவள் என்னைக் கெடுத்துவிட்டாள். அடிக்கடி தற்கொலை செய்து கொள்வதாகப் பயப்படுத்துகிறாள்" என்றெழுதினார்.

இவ்வாறு குடும்ப வாழ்வு துன்பக்கேணியாக அவருக்கிருந்தாலும் ருஷ்யா தேசம் அவரது மூளையையும் கையையும் அறிந்து கொண்டுவிட்டது; புகழ் மாலையை ஈயலாயிற்று.

மேற்குறித்தவாறு சென்றது டால்ஸ்டாயின் மணவாழ்க்கை. நாள் போகப் போக சோன்யா வெறுப்புற்று வெளிப்படையாகப் பகைக்கலானாள். தற்கொலை செய்துகொள்வதாகப் பன்முறை பயப்படுத்தினாள். அப்போது டால்ஸ்டாய் தான் ஒரு பைத்தியக்கார ஆஸ்பத்திரியி லிருப்பதாகவே நினைத்துவிட்டாராம்.

இப்படிப்பட்ட நிலைமையில் டால்ஸ்டாய் ஓடி தப்பிக்கொள்ள முடிவுசெய்தார். அதற்கு ஒரு ஒரு புதல்வியும் வேறொரு பெண்ணும் உதவி செய்தார்கள். இவ் இருவரும் டால்ஸ்டாயின் சாமான்களை மூட்டை கட்டி ஒரு ரயில்வேஸ்டேஷனுக்குக் கொண்டு சென்று கொடுத்தார்கள். அங்கு ஒரு நண்பருடன் ரயிலுக்காக ஒரு மணி நேரம் காத்திருக்கவேண்டியிருந்தது. அந்த ஒரு மணி நேரமும் சோன்யா தேடி வந்து விடுவாளோ வென்று பயந்த பயம் கொஞ்சமல்ல. ஆனால் நல்ல வேளையாக நெடு நேரத்திற்குப் பிறகு தான் அவளுக்குத் தெரிந்தது.

தெரிந்ததும் ஒரு குட்டையில் (குளத்தில்) குதித்துவிட்டாளாம். உடன் பக்கத்தில் நின்ற சிலர் காப்பாற்றினர். அதன் மேல் அவள் காண்பித்த அட்டகாசம் கொஞ்சமல்ல. இடைவிடாது அழுதாளாம்; நெஞ்சில் அடித்துக் கொண்டாளாம். முதலில் 'பேப்பர் வெயிட்டி'னாலும், அப்பால் சம்மட்டியினாலும் நெஞ்சிலறைந்தாளாம். அதனாலும் திருப்தி கொள்ளாது கத்தி, கத்திரிக்கோல், ஊசி ஆகியவற்றால் குத்திக் கொண்டாளாம்.

நிற்க, ஓடிப்போன டால்ஸ்டாய் பல்கேரியாவை நண்ணினார். அங்கு சுமார் 50 மைல் பிரயாணம் செய்வதற்குள் நிமோனியா ஜுரத்திற்கு இரையானார். அதனைத் தெரிந்துகொண்ட ஒரு ஸ்டேஷன் மாஸ்டர் அவரை ஆதரித்து படுக்கை தயாரித்துக்கொடுத்தார். அப்போது வயது 80.

அதிசீக்கிரத்தில் டால்ஸ்டாயின் நோய் உலகம் முழுதும் தெரிந்து விட்டது. தெரிந்ததும் ஆயிரக்கணக்கில் மக்கள் வந்து குழுமலாயினர். சில தினங்களில் சிறிய ஊராக விருந்த அவ்விடம் பெரிய பட்டணமாக மாறிற்று. துப்பறிபவர்கள், போலீஸ்காரர்கள், பத்திரிகாசிரியர்கள், படம் பிடிப்பவர்கள் எல்லோரும் சுற்றத் தொடங்கினார்கள். அப்போது அங்கிருந்த சிறிய டெலிகிராப் ஆபீசில் வந்த தந்திகள் ஓராயிரத்து எண்பத்து இரண்டாம். பல நண்பர்கள் வந்தபோது சோன்யாவும் தோற்றினாள். வந்ததும் 48 வருடம் உடன் வாழ்ந்துவந்த அவளுக்கு அநுமதி கொடுக்கப்படவில்லை

டால்ஸ்டாய்க்குப் புத்திக் குழப்பமேற்பட்டது. ஆனால் சிற்சில போழ்து மயக்கம் தீர்ந்தபோதெல்லாம் சோன்யாவைப்பற்றிக் கவலைகொண்டு அவள் நோயாகப் படுத்திருப்பாளோ வென்று சந்தேகப்பட்டார்.

விசேஷ வைத்ய உதவி வா நோமாகிவிட்டது. அது டால்ஸ்டாய் எதிர் பார்த்ததே. ஒருநாள் நண்பகலில் அவர் படுக்கையில் எழுந்திருந்து "இது தான் என் முடிவு காலம். நான் கடைசியாக இந்த ஒன்று மட்டிலும் கூறுகிறேன். இந்த உலகில் லியோ டால்ஸ்டாயைத் தவிர வேறு எத்தனையோ ஜனங்களிருக்கின்றனர். அவர்களெல்லோரையும் விட்டு விட்டு நீங்கள் லியோவையே கவனிக்கிறீர்கள்." என்று கூறினார்.

கடைசியில் நாடி தளரலாயிற்று. உடன் சோன்யா அநுமதிக்கப் பட்டாள். அவள் பக்கத்தில் உட்கார்ந்து ஒரு முத்த மிட்டாள். உடன் ஒரு பெரு மூச்சுப் பாய்ந்தது. இரண்டு மணி நேரமானதும் உயிர் பிரிந்தது.





# மாக்ஸிம் கார்கி

## சோவியத் ருஷ்யாவின் அரும்பெரும் புதல்வன்

மெஸர்ஸ் செசில் செஸ்டர்டன் ஈவினிங் ஸ்டாண்டர்ட் பத்திரிகையில் எழுதுவதாவது:—

1932-ம் வருஷம் வரையிலும் புஸ்தகங்கள் தெரிந்தெடுத்து ஜனங்களுக்கு பரவச் செய்யவேண்டிய கடமை ஆர். ஏ. பி. பி. கூட்டுறவில் இருந்தது. எல்லா கலைஞானங்களும் கவிதை மூலமாக உள்ளவைகளும் அதிலுள்ளவைகளே முடிவானதாகவுமுள்ள புஸ்தகங்கள் ஷை சங்கத்தின் மூலமாக பரவி வந்து கொண்டிருந்தது. புஸ்தகங்கள் மூலமாக வெளி வருவதைவிட அதன் படி-வழி காட்ட வேண்டிய நடிகர்கள் வித்தைதான் முக்கியமாக வேண்டியதிருந்தது. விஷயங்கள் குறைவாக இருந்தாலும் உயர்தர பாஷையில்லாவிட்டாலும் பிடிதாமாக உள்ளவைகளாவும் நடத்தையில் காண்பிக்கக் கூடியவைகளாயு முள்ளவைகளா யிருந்தால் புறங்காட்டாது என்பது போல ரெடக் எக்சென்பர்க் லைசன்ஸ் வேதப் புஸ்தகம் எழுதிய டான் டேரிகாவ் முதலியவர்கள்-பின் வாங்குவார்கள் என்ற ஒரு நம்பிக்கை இருந்தது. அவ்விதத் தொழில் நிலத்தில் பாடுபட்டது போலுள்ளவைகளா யிருக்க வேண்டுமென்பது கருத்து.

அதிலிருந்து சோவியத் புஸ்தகங்கள் விலை குறைவுபட்டன. டிக்கன்சன் போல புஸ்தகங்கள் எழுதி விற்பனை செய்தவர் ஒருவருமில்லை. சர். வால்டர் ஸ்காட் அடுத்தபடியாக இருந்துவந்தார் 17 கோடி ஜனங்களும் எலும்பில்லாதவர்களாய் தளர்ந்து விவசாயிகளுடையவும், சுரங்க வேலை செய்பவர்களுடையவும், மீன் பிடிக்கிறவர்களுடைய கதைப் புஸ்தகங்களையும் வாசிக்க வேண்டுமாய் கேட்டார்கள். இந்த அழலுக்கு கொண்டுவந்தவர் தான் மாக்ஸிம் கோர்கி, சமூகக் கொள்கையுடைய ஆசிரியர்கள் சோவியத்தை சொர்பனம் போலாக்கியதும் ஜெயிலிலடைத்து தொந்தரவு செய்தவர்களான சமூக கொள்கையுடைய ஆசிரியர்கள் ரஷ்யாவுக்கு மிகுந்த அன்புள்ளவர் களானார்கள்.

அந்த தேசத்தின் அநேக பாகத்திலிருந்து திரள் திரளான யாத்திரைக்காரர்கள் தினசரி அவரிடம் வந்து அந்த தேசமெங்கும் கீர்த்தி பரவிற்று.

கார்கியினுடைய யோசனையின் பேரில் ஸ்டாலின் ஆர். ஏ. பி. பி. யை கலைத்துவிட்டார். சோவியத் ஆசிரியர்கள் வகுப்பு வாதத்தை நிறுத்தி தலைமை பட்டார்கள். பலனும் உடனுக்குடனே இருந்தது. அழகான கதைப் புஸ்தகங்களும் ரஷிய ஜனங்களின் கதைகளும் ஹான்ஸ் அன்டர்சன் கிரிம் புஸ்தகங்களும் கோடிக்கணக்காக விற்பனையாயின.

2 வருஷம் கழிந்து பெரிய கூட்டங்களில் அதனுடைய ரிப்போர்டுகளை வாசித்ததில் ஏராளமான ஜனங்கள் கூர்மையாய் கவனித்துக் கொண்டிருந்தார்கள்.

இந்தக் கலக்கத்திற்குமுன் ஜனங்களால் ஆதரிக்கப்பட்ட கூட்டுறவாக இருந்ததில்லை. இப்போது சோவியத் கூட்டுறவு இதோடு அன்பு பாராட்டிற்று. 64 வயது வந்த கிழவராகிய கோர்கிதான் முக்கியமாக அக்ராசனாதிபதியாக இருந்து வந்தார். ஷை கூட்டுறவு எவ்வித காரியங்களையும் நடத்தையில் காண்பிக்க வேண்டுமென்ற கொள்கையே உடையதாக இருந்தது.

சோவியத் ஆசிரியர்களை 19-வது நூற்றாண்டிலுள்ள ரஷிய தேசத் தொண்டு புஸ்தகங்களையும் மற்றும் பிரதேசத்திலுள்ள புஸ்தகங்களையும் ரோமன் ரோலன் புஸ்தகத்தையும் வாசிக்கும்படி கட்டாயப்படுத்தினர்.

கோர்க்கி சோவியத் கலைஞானங்களில் மிகுந்த நம்பிக்கை வைத்து நாடகங்கள் மூலமாகவும் வேடிக்கை கதைப் புஸ்தகங்களாகவும் பாப்பி பெண்களுக்கு தகுந்ததாக உள்ள உணர்ச்சியை ஏற்படுத்தினர். ஆசிரியர்களும் யூ. எச். எச். ஆர். கூட்டுறவில் நன்றாக உழைத்தார்கள். ராஜ விஸ்வாசமும் அதிகரித்தது. புஸ்தகங்களும் ஏராளமான விற்பனையாயிற்று. லாபமும் அதிகம் கிடைத்தது. கூட்டுறவின் செலவுக்கு மிகுந்த பணம் திரண்டது. ஒவ்வொரு காங்கிரஸ் விவகாரங்களும் விவாதங்களும் பள்ளிக்கூடங்களிலும் சுரங்க வேலைக்காரர்களிடம், காலாட்படை, கப்பற்படை இவைகளிலும் கிழம்பி சோவியத் ஆக்ஷி நிரம்பியது.

# தெய்வீக அசோகர்

பண்டிட் ஜவஹர்லால் நேரு எழுதிய "உலக சரித்திரக் கண்கள்" என்ற புஸ்தகத்திலுள்ள மௌர்யன் சக்கரவர்த்தி அசோகருனுடைய சரிதை குறிப்பிட்டிருக்கிறது.

சந்திர குப்தா என்ற அரசர் கிருஸ்தவ வருஷ ஆரம்பமாகிறதற்கு 300 வருஷத்துக்கு மூன் உள்ளவர். அவருடைய மகன் பிந்துசாரா என்றவர் 25 வருஷகால மாண்டுவந்தார். ஈஜிப்த் தேசத்திலிருந்து அநேகர் நிலவாகை சாயம் காய்ச்ச இவருடைய கோர்ட்டுக்கு வருவதுண்டு. இந்திய மஸ்லின்களிலும் அவர்களுடைய படங்கள் போடப்பட்டிருக்கிறதையும் மௌர்யா காலத்திற்கு முன்னதாகவே ஒருவிதமான கிளாஸ் இருந்திருப்பதையும் பீகார் மாகாணங்களில் கண்டுபிடித் திருக்கிறார்கள்.

கிரீக் அம்பாசடார் மகஸ்தீன்ஸ் சந்திரகுப்தா கோர்ட்டுக்கு வந்து இந்திய நேர்த்தி அழகுகளின் அருமையையும் உயரத்திற்கு தகுந்த மிதியடி என்பவைகளையும் எழுதியிருப்பதை ஒவ்வொருவரும் வாசிக்க அருமையாயிருக்கும்.

பிந்துசார் அரசருக்கு பின் அசோகர் 268 B. E. யில் பட்டத்திற்கு வந்தார். மத்திய இந்தியா, வட இந்தியா முழுவதிலும் சென்டிரல் ஏசியா வரையிலும் சக்கரவர்த்தியாய் வழங்கினர். தென் கிழக்கு தென் பாகங்களில் கிருஷ்ணா கோதாவரி மகாநதிக்கு மத்தியிலுள்ள இந்திய கீழ் கரையிலுள்ள "பாலிங்கா" வரையும் அரசாட்சிக்கு வந்து 9 வருஷத்திற்குள் ஜெயித்தார். பாலிங்க ஜனங்கள் தைரியமாக சண்டையிட்டு ரத்த பிரளயமாகி முடிவில் சரணமடைந்தார்கள். இந்தச் சண்டையும் கொலைகளும் அசோகருக்கு மிகுந்த மன வருத்தத்தை விளைவித்தது. அது முதல் சண்டையை நிப்பாட்டிவிட்டார். தென் பாகத்தில் கொஞ்ச இடத்தைவிட மற்றய எல்லா பாகங்களிலும் ஏகாதிபத்தியமாக ஆண்டு வந்தார்.

அசோகர் நமக்கு சொல்லுகிற மொழிகளும், செய்கைகளும் பாஷைகளிலும் பித்தளை தகட்டுகளிலும் எழுதியிருப்பதும் நம்மிடமிருக்கிறது. அசோகருடைய சில அலகபாத் கோட்டையிலிருப்பதையும் நாம் தெரிகிறோம். அவைகள் போக அநேக அத்தாக்ஷிகளுமிருக்கின்றன. சண்டையில் ஜெயித்ததின்பலன் கொலைகளையும் பயத்தையும் ஏற்படுத்திய தென சொல்லப்பட்டிருக்கிறது. "தன்னையும் ஜனங்களுடைய இருதயத்தையும் தர்ம வழியில் ஜயமடைவதுதான் உண்மையான ஜயம் என சொல்லப்பட்டிருக்கிறது" யாராவது அவருக்கு தப்பிதம் செய்தாலும் கூட பொருத்துக் கொள்ளக் கூடிய பரிசுத்தராகி விட்டார். அவருடைய பரிசுத்த அரசாட்சியின் தோற்றம் மிருகத்தனத்திற்கு பாதுகாப்பாகவும் தன்னடக்கமும் மனச் சாந்தியும் சந்தோசஷமாகவுமாக இருந்தது. மனிதர்களுடைய இருதயங்களை இரக்கச்சித்தின் மூலமாகவும் பரிசுத்த மான—மனதோடும் ஜயிக்கலாமென்பதை உணர்ந்து இதுபடி பிரதேசத்திலும் வெற்றி பெற்றிருக்கிறார்.

அசோகர் புத்தமதத்தாகி தர்மவழியை பரப்பி வந்தார். வல்லங்கமாவது கட்டாயமாவது ஒன்றும் ஏற்படவில்லை ஜனங்களுடைய இருதயத்தை ஜெயித்தே புத்தர் மதத்தை பரப்பினர்.

ஆசியா, ஐரோப்பா, ஆபிரிக்கா முதலிய இடங்களுக்கு தூதர்களையும் அம்பாசடார்களையும் அனுப்பினர். கொழும்பிற்கு சகோதரன் மகேந்திராவையும் தங்கை சங்கமித்திராவையும் அனுப்பினர். காயாவிலிருந்து (பீபல்மரக்கிளையையும் கொண்டு போகச் சொல்லிருந்தார். அனுராதபுராவில் கோவிலுள்ள மாம் பீபல் மரமாகக் காணப்படுகிறது. பழைய கொப்பிலிருந்தே உண்டாக்கப்பட்ட தெனத் தெரிகிறது.

இந்தியாவில் புத்த மதம் விரைவாகப் பரவியது. தர்மம் தளர்ந்தது. பிரார்த்தனைகளும் பூஜைகளும் விசேஷங்களும் வளர்ந்தது. பொதுத் தோட்டங்களும் கிணறுகளும், வீதிகளும், ஆஸ்பத்திரிகளும் பரவின. பெண்களுக்கு கல்வி வசதி யளிக்கப்பட்டது.)

சைனா ஜப்பான் ஆசியா மற்றும் பிரதேசங்களிலிருந்தும் ஆண் பிள்ளை வாசிக்கக் கூடிய 4 உயர்தரக் கலாசாலை ஏற்படுத்தப்பட்டன. பிரதேசத்துப் பிள்ளைகள் புத்தமதக் கொள்கைகளை அவர்களுடைய தேசத்தில் பரப்பினர்கள். தேசமெங்கும் புத்த சந்நியாசிகள் பெருகி விட்டார்கள். முடிவாக பாட்னா பீகார் முதலிய ஊர்களுக்கு வந்து தங்களுக்கு வழக்கமாக உள்ள பூஜைகளை ஒழுங்கு முறையாக செய்து கொண்டு தங்கி விட்டார்கள்.

புத்தமதக் கொள்கை ஜீவவதை செய்யக்கூடா தென்பதை அடிப்படையாக உள்ளது. க்ஷத்திரியர்களும் பிராமணர்களும் மது மாமிசங்கள் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். வரவர அவைகளும் குறைவுபட்டன.

இந்த விதமாக 38 வருஷம் அரசாக்ஷி செய்து வந்தார் பொது வேலைக்கு எப்பொழுதும் எந்த நேரத்திலும் எந்த சமயமாக இருந்த போதிலும் முன் வருபவராயிருந்தார்.

அசோகராஜன் 226 B. C. ல் உயிர் துறந்தார். இறக்கிறதற்கு கொஞ்ச நாளைக்கு முன் தான் புத்த சந்நியாசியானர்

காசிக்கு அருகில் சாரநாத் ஊரில் அழகிய அசோகர் தூண் சிங்கத் தலையோடு பார்க்கலாம். அசோக ராஜரின் தலைநகர் பாடலி புரமாக இருந்தது. பாடலிபுரத்திலுள்ள அவருடைய அரண்மனை பாழாகக் கிடந்தாலும் Fahein என்ற ஒரு சைனா பிரயாணி அவருடைய புஸ்தகத்தில் மனிதர்களால் செய்யப்பட்டதாக இருக்காது என்று எழுதி வைத்திருக்கிறாராம்.

அசோகர் மொழிகள் முக்கியமாவது. எல்லா சமயத்தார்களும் பயபக்தியோடிருக்க வேண்டும். ஒவ்வொரு ஆன்மாவும் தன்னுடைய சமயத்தை உயர்த்தியும் மற்றயவைகளை மேன்மைப் படுத்தவும் வேண்டும்.

---

கிருஷ்ணன்:—விகடா! பாதுகாப்பு என்பது என்ன.

விகடன்:—கிருஷ்ணா! உன்னிடமே கொள்ளையடித்து உன்கூடவே யிருந்தால் உனக்கு பாதுகாப்புத்தான்.



# விகடத்திரள்

எஜமான் வேலைக்காரனைப் பார்த்து:- "அடே! ஏண்டா டாமி நாய் குலைக்கிறது" என்று கேட்டான்.

வேலைக்காரன்:—எஜமானே, யாரோ ஒருவன் நம் வீட்டிற்குள்ளிருந்து களவுசெய்து ஓடுகிறான் அவனைக் கண்டு குலைக்கிறது.

* * *



அண்ணா:—தம்பீ! அநியாயமான காரியங்களையும் ஆடாத செய்கைகளையும் செய்யாதே. குடிகெட்டுப் போகும்.

தம்பி:—அண்ணா! நீங்கள் சொல்லுகிறதை ஒப்புக் கொள்ளுகிறேன். குடி கெட்டுப் போம் என்று வருத்தப்படுகிறீரே. குடி கெட்டுப் போகிறதற்கு காந்திஜீ மிகுந்த பாடுபடுகிறதை தாங்கள் பார்க்கவில்லையா?

* * *



உபாத்தியாயர் பள்ளிப் பையனைப் பார்த்து :—அடே! நீ இராப் பாடம் படித்தாயா?

பையன்:—சார்! பகலில் படித்த படிப்புக்கே சம்பாத்தியமில்லாமல் படித்தவர்கள் திண்டாடுகிறார்களே, இராப் படிப்பு எதற்கு?

* * *

உபாத்தியாயர் பள்ளிப் பையனைப் பார்த்து :—அடே, நீ நன்றாகப் படித்தால் மேல் கிளாசுக்கு வரலாம்.

பையன்:—சார், மேல் கிளாசுக்கு போனால் சம்பளம் அதிகமாகக் கொடுக்க வேண்டியதிருக்கிறதே!

* * *

வாத்தியாயர் பள்ளிப் பையனைப் பார்த்து:—பிள்ளாய் அதிகமாய் பேசாமலிருந்தாலே தீர்க்காயுசு.

பையன்:—சார்: சம்பளத்தை வாங்கிக்கொண்டு பள்ளிக்கூடம் வந்து பேசாமலே இருந்துவிட்டு போனால் தங்களுக்கும் தீர்க்காயுசுதானே.

* * *



படித்த ஒருவன்படியாத ஒருவனை பார்த்து :—"நீ கெட்டவன்" என குறைவாகச் சொன்னார்.

படியாதவன்:—படிப்பாளியே, நீர் படித்தது இவ்வளவுதானா? படிப்பின் மதமா இவ்வளவு பேசச் சொல்லுகிறது? கல்லாத பேர்களே நல்லவர்கள் நல்லவர்கள் என்று சொல்லப்பட்ட பாட்டை படித்திருக்கிறீரா?

* * *

ஒரு முதலாளி வேலைக்காரனை அடித்தார்.

வேலைக்காரன் :—ஏனையா அடிக்கிறீர்?

முதலாளி:—நீ உன்னுடைய வாத்தியாரிடம் ரூபாயும் கொடுத்து அடியும் படவில்லையா? என்னிடம் ரூபாயும் பெற்றுக்கொண்டு அடிபடவும் வருத்தமாகவா இருக்கிறது?

* * *

குருவைப் பார்த்து சிஷ்யன்:—குருவே, சிவன், கிருஷ்ணன், மானிடர் இம்மூவருக்குள் பெரியவர் யார்.

குரு:—சிஷனே! சிவன்தான் பெரியவர்.

சிஷன்:—குருவே! சிவபெருமானுக்கு அழிவே இல்லை. கிருஷ்ணனுக்கோ அவதாரம் பத்து. மானிடருக்கோ எண்ணிறந்த கோடி பிறவி. ஆகையால் மானிடர்தான் பெரியவரென மதிக்கிறேன்.

* * *



# நாடக மேடையும் திரையும்

(ஜி. வீ. சாமி)

இதுகாறும் நாம் எண்ணிலடங்கா நாடகங்களையும், சினிமாப் படங்களையும் பார்த்திருக்கின்றோம். அவற்றுள் நாம் அறிந்துகொண்டவை யாவை யென்பது பற்றி சிறிது ஆராய விரும்புகிறோம்.

தமிழ் நாடக மேடையைப்பற்றி முக்கியமாக அறிந்துகொண்டது ஒரே ஒரு விஷயம்தான். அது என்னவெனின் 'சௌ சௌ' பாட்டுகள் மிகவும் தாராளமாகக் கேட்க வசதியுள்ள ஒரு இடமாகும். 'சௌ சௌ' என்றால் நாடகப் பிரியர்கள் சந்தேகமுறக் கூடும். அதுதான் இப்பொழுது கிராமபோன் ரிகார்டுகளில் கேட்கின்றோமே; ஒரே கதையில் பல கதைகளின் பாட்டுகளைப் பாடுவது போன்றது. சாதாரணமாய் 'வள்ளி திருமணம்' என்னும் நாடகத்தை யெடுத்துக் கொள்வோம். சுப்ரமணிய வேடனாகத் தோன்றுபவர், 'தேடி வந்தேனே வள்ளிமானே' என்ற பாட்டை ஆர்மோனியக்காரர் பக்கலில் நின்று சபையோர்களை நோக்கிப் பாடுகின்றார். அவரது சாரீரம் நயமாகத் தானிருக்கின்றது. ஒரு கோடியில் பலே! பலே! வாரே வா! வாரே வா! என்ற குதூகலம். இன்னொரு கோடியில் பாட்டு முடிந்தவுடன், 'ஒன்ஸ்மோர்' என்ற ஓங்கார சப்தம். மற்றொரு இடமிருந்து 'பாகவதர்! காமி சத்தியபாமா' என்ற மேளம். பாகவதரின், 'இதோ பாடுகின்றேன்' என்ற மறுமொழி. இவற்றை யெல்லாம் காணும்பொழுது நடிகரைக் குறித்து வருந்துவதா அல்லது நாடகாபிமானிகளைக் கண்டு அழுவதாவென்று நமக்கு தோன்றவில்லை.

போகட்டும், பாடுகிறவர் எவ்வாறு பாடுகின்றார்? ஆர்மோனியக்காரரையும் தபேலாக்காரரையும் ஓர் பார்வை பார்க்கின்றார். வந்து விட்டது மகாயுத்தம்! எங்கே? ஐரோப்பாவிலா? எவரெவருக்கு? இந்த வினாக்களுக்கு வாசகர்கள் உடனே பதில்கூறி விடலாம். பத்து நிமிடங்களில் பாடவேண்டிய பாட்டை விடுத்து ஒரு மணி சாவகாசத்தில், நடிகர், ஹார்மோனியம் வாசிப்பவரது திறமையை பரிசோதிப்பதும், ஹார்மோனியக்காரர் தபேலாக்காரரை சோதிப்பதும் மற்றும் எல்லோருஞ் சேர்ந்து எவரெவர் கைதேர்ந்தவர்களென்று பரிசோதிக்கும் பொருட்டு ராகச் சண்டை, தாளச் சண்டை, ஆபாச முகச் சண்டை போடுவதும் போன்ற அர்த்தமற்ற தெருக்கூத்தாக முடிக்கின்றனர்.

அன்றியும், ஒரு நாடகத்திற்கு பாட்டுகள் எந்தெந்த இடங்களில் அமைத்தல் வேண்டுமென்பதையே நடிகர்கள் கவனிப்பதில்லை. ஒரு காக்ஷியில் கதாநாயகன் சிற்றுண்டி அருந்தப் போகின்றானென்று வைத்துக் கொள்வோம். உடனே 'பியாக்' ராகத்தில் "சிற்றுண்டி யருந்திடச் செல்லுவேன் யானுமே" என்ற பாட்டு பொருக்கென எழும்பிவிடுகின்றது. மற்றொரு காக்ஷியில் இருகக்ஷியினர் சண்டை போட்டுக்கொள்கின்றனர். ஒருவன் "கொல்லுவேன் எவர் சேர்ந்துவந்தாலும் நான் வெல்லுவேன்" என்று பாடுகிறான். அதற்கு எதிராக மற்றொருவன் "போடா மதிகேடா புத்திகெட்ட பயலே" யென்று சங்கீதமாரியைப் பொழிகின்றான். இந்தக் கூத்தைக் காணும்பொழுது வெட்கம் மிக மிக உண்டாகாமல் போகாது. எவராவது சண்டையிடும்பொழுது சங்கீதம் பாடுவதுண்டா? இத்தகைய குற்றங்களை ஏன் நாடகக் கம்பெனியாரும், நடிகர்களும் திருத்தக்கூடாது? பாடல்கள் முக்கியமாக இருக்க வேண்டிய இடங்கள், அதிக சந்தோஷ காமான பாகங்களும், கதாநாயகனோ அல்லது கதாநாயகியோ துக்கசாகரத்தி லிருக்கும் சமயம் தங்களது துன்பத்தை வெளிக்காட்டும் பொருட்டு பாடுதலும், ஹாஸ்ய பாகங்களுமாகும். இந்த முறையை விடுத்து கண்ட இடங்களிலெல்லாம் பாடல்கள் இசைத்துப் பாடுதல் தகுதியன்று.

பாடல்கள் இவ்வாறு இருக்க ஆடல்களின் கதியென்ன? அதே கதிதான். தமிழ் நாடக மேடைகளில், சில 'அமெச்சுவர்' நடிகர்களிடத்தும், சிற்சில பாய்ஸ் கம்பெனி நடிகர்களிடத்தும் தவிர, ஏனையவர்களிடத்து யாதொரு நடிப்பையும் எதிர்பார்க்க முடியாத நிலைமையில் இருக்கின்றது. காரணம் நடிகர்கள் கதைகளின் சாரம் தெரிந்து அவற்றிற் கேற்றாற்போல அநுபவத்தோடு நடிக்க முயலாத குறைதான். ஆதலால் நடிகர்கள் நாடகம் என்பது என்ன? அதன் முக்கிய நோக்கமென்ன? அதை எவ்வாறு மக்களிடை நடித்து காண்பித்தல் வேண்டும்? என்பனவற்றை முக்கியமாக அறிந்து, ஒழுங்கான முறையில் நடிப்பார்களாயின் பெருமையடையலாம். நாடக அபிமானிகளும் சீர்திருத்த முறையிலுள்ள நாடகங்களுக்கே ஆதரவு காட்டுவரென்று நாம் கொள்ளுகின்றோம்.

இத்தகைய நிலைமையில் அநேக தனவான்கள் சினிமாப் படங்கள் எடுப்பதற்கு முன் வந்திருக்கின்றார்கள். ஆனால் அவர்கள் சினிமா விதிகளை ஒழுங்காக கவனிக்கின்றனரா என்பதுதான் சந்தேகம். நாடகத்திற்கும், சினிமாவுக்கும் பல வித்தியாசங்கள் உள்ளன. நாடகத்தில் காட்ட முடியாத சில பாகங்களை சினிமா படங்களிற் காண்பிப்பதற்கு அநேக வசதிகள் உண்டு. போதிய அளவில் தத்ரூபமாய் நடிப்பதற்கு அநேக சௌகரியங்கள் உள்ளன. ஆனால் நாடகத்தில் அவ்வளவாக காட்டுதல் இயலாது. இவ்வளவு வசதிகளிருந்தும், நம் தமிழ் பேசும் படக் கம்பெனியார்கள் அம்முறையை கையாளுதலைக் காணோம். நடிப்பற்ற நாடகத்தையே பின்பற்றி படம் எடுக்கின்றார்கள். மற்றையப் பாஷைப் படங்கள் எவ்வளவு முன்னேற்றமடைந்திருக்கின்றன வென்று நோக்குங்கால், ஏன் இவர்களும் அவ்வாறு அநுஷ்டித்தல் கூடாது என்றுபடுகின்றது.

மேலும் அநேகமாய், சினிமாக்களில் நடிப்பவர்கள் நாடகமேடை நடிகர்களாவர். சில படம் எடுப்போர் பிரபல நடிகர்கள் என்று பொது மக்களால் கருதப்படுகிறவர்களை சினிமாக்களில் தோற்றுவித்தால், அப்படத்தைக் கொண்டு திரண்ட செல்வம் திரட்டலாமென்று ஆகாயக் கோட்டை கட்டுகின்றனர். சமீபத்தில் நாம் பார்த்த தமிழ் பேசும்—இல்லை, தமிழ் பாடும் படத்தில் என்னைப் போன்று மற்றவர்களும் ஏமாந்திருப்பார்களென அறிகிறோம். ஆதலின் நடிப்பு திறமை வாய்ந்தவரை தேர்ந்தெடுத்து சினிமா

கலையை நன்குணர்ந்த டயாக்டர்களைக் கொண்டு படம் பிடித்தால் ஒழுங்குபடக் கூடும்?

எமக்குத் தெரிந்தமட்டில் நாடக மேடை நடிகர்களை விடுத்து 'அமேச்சுவர்' நடிகர்களை நடிக்கச் செய்வதே சீராகும். அவர்களே கூடிய வரையிலும் முதன்மையாக நடிக்க முயல்வார்கள். சில நாடகத் திலகங்களாகத் தங்களை எண்ணிக் கொள்ளுபவர், தற்பெருமையும், தன்னம்பிக்கையுங் கொண்டு சினிமாவில் கியாதிபெறலாமெனத் தோன்றி யிருக்கின்றனர். ஒவ்வொரு நடிகருக்கும் தன் நம்பிக்கையிருக்கவேண்டியது அவசியமே. இருப்பினும் ஒழுங்குபட நடித்தாலன்றோ அழகா யிருக்கும். நாம் பார்த்த வரையில் நாடக நடிகருள் நமக்கு பிரீதியான முறையில் நடிப்பவர் ஒரு சிலரே. ஏனயவர் ஆற்றலுடன் நடிப்பதைக் கண்டோமில்லை.

ஆதலின் நாடகமேடை நடிகர்கள் சினிமாக்களில் நடிக்கக் கூடாதென்பது நமது உத்தேசமல்ல. தக்க முறையில், பிழைகளுக்கு இடந்தாதவாறு நடிப்பார்களாயின் நாமும், மற்றவரும் போற்றுவோம்.

கொஞ்சங் கொஞ்சமாக நம் சினிமாப் படம் எடுப்போர் சற்று சீர்திருத்த முறையில் படம் எடுக்க முன் வந்தது நமக்கு மிகுந்த சந்தோஷத்தை யூட்டுகின்றது. அவ்வாறே அதிக ஊக்கங் காட்டுவாராயின் தமிழ் படங்கள் சிறப்புறுவது திண்ணம். ஆயினும் நாம் ஒன்று கேட்டுக் கொள்கின்றோம். இத்தனை காலமாக பழைய கதைகளாகிய ராமாயணம், மஹா பாரதம், வள்ளி திருமணம், கோவலன் போன்றவற்றை திரும்பத் திரும்ப படமெடுப்பதைப் பார்க்கிலும், நவீன, நீதி தாக்கூடிய கதைகளை ஏன் படம் எடுத்தற்கூடாது?

கடைசியாக படம் எடுப்போர்களுக்கு ஒன்று கூறி நமது வியாசத்தை முடிக்கின்றோம். ஓர் சினிமா காக்ஷி நன்றாக இருப்பதோ அல்லது அவ்வாறு இல்லாதிருப்பதோ பொதுவாக டயாக்டரின் ஆற்றலைப் பொறுத்தது. பின்னர் தொனி யெடுப்போரும், படம் எடுப்போரும் உத்திரவாதமுடையவராவர், இத்தகைய அநுபவங் கொண்டவர் உதவியால் நாம் எதிர்பார்க்கின்றபடி படங்கள் தயாரிப்பார்களாயின் தமிழ் உலகிற்கே, முக்கியமாக சினிமாப் பிரியர்களுக்கே ஓர் விருந்தளித்ததாகும்.

## தமிழ்நாட்டுப் பெண்கள் முன்னேற்ற சபை

தமிழ் நாட்டில் பெண்கள் சமூக சம்பந்தமாய், அவர்களது விடுதலைக்காகவும், சுதந்திரத்திற்காகவும் பாடுபட சில பெண்களைத் தயார் செய்யவும், அநாதியாய் ஆதாவின்றி நிர்க்கதியாக்கப்பட்ட பெண்களுக்கு ஏதாவது ஓரளவிற்கு உதவி செய்து அவர்களது வாழ்க்கையைத் துயரமில்லாமல் நடக்கும்படி செய்யவும், விதவைத் தன்மையால் துயருறும் பெண்களுக்கு மறுவிவாஹம் செய்வதால் வாழ்விற்கு ஏதாவது ஒரு வழி செய்யவும், அவர்கள் தக்க பொருத்தமான துணைவர்களை அடையும்படி செய்யவும், சிக்கனமாகவும், கம்பீரமாகவும், வாழ்வு நடத்தப் பெண்மக்கட்குப் பயிற்சி அளிக்கவும் தொழில், கல்வி, சங்கீதம் கற்றுக் கொடுக்கவும், குழந்தைகளை வளர்ப்பதன் மூலம் பெற்றோர்களுக்குத் தொல்லையும், கஷ்டமும் இல்லாமல் இருப்பதற்கும், பெற்றோர்கள் குழந்தைகளை வளர்க்கும் முறையறியாது வளர்ச்சியின்மை, வியாதி முதலிய குறைபாடுகள் உண்டாகாமல் இருக்கும் தாய்மார்களுக்கு வளர்ச்சி முறை கற்றுக் கொடுக்கவும் ஆன காரியங்களைச் செய்வதற்குத் தகுதியுள்ள ஒரு ஸ்தாபனத்தை யுண்டாக்கி நடத்திவா வேண்டுமென்று பல அன்பர்கட்கு வெகு காலமாய் இருந்து வந்த ஆசையை முன்னிட்டும், பல மகாநாடுகளில் தீர்மானங்கள் செய்யப்பட்டிருப்பதை முன்னிட்டும் அந்தப்படி ஒரு ஸ்தாபனத்தை ஏற்படுத்த உத்தேசித்து அதற்கு வேண்டிய பூர்வாங்கமான காரியங்களைச் செய்வதற்காக, சென்ற மேமீ 15உ புதன்கிழமை காலை 10 மணிக்கு கானாடுகாத்தான் தோழர் வைசு. ஷண்முகம் அவர்கள் இல்லத்தில் ஓர் கூட்டம் தோழர் ஈ. வெ. ரா. அவர்கள் தலைமையில் நடந்தது. தமிழ் நாட்டில் உள்ள எல்லா ஜில்லாக்களிலுமிருந்து பல அன்பர் விஜயம் செய்திருந்தனர்.

அக்கூட்டத்தில் "தமிழ் நாட்டுப் பெண்கள் முன்னேற்ற சபை" என்று பெயரால் ஒரு ஸ்தாபனத்தைத் திருச்சியில் ஸ்தாபிப்பதென்றும், அச்சபையின் சார்பாக ஒரு (குரு குலம்) பெண்கள் நிலையமும், பிள்ளை வளர்ப்பு விடுதியும் ஏற்படுத்துவதென்றும் தீர்மானங்கள் செய்யப்பெற்று, அதற்குரிய விதிகளும், பொறுப்புள்ள நிர்வாக சபைக் கமிட்டியும் Working Council (வேலை மன்றமும்) அமைத்து ஷை சபைக்குக்காரியதரிசிகளாக, நீலாவதி அவர்களையும், வைசு. ஷண்முகம் அவர்களையும் தெரிந்தெடுத்திருக்கின்றனர்.

ஜூன் மாதத்தில் அச்சபையைத் திறப்பதற்குரிய ஆரம்ப வேலைகள் நடைபெறுகின்றன என்று அதன் காரியதரிசிகளில் ஒருவர் எழுதுகிறார்.





# கலைக்ஞானம்

(ரவீந்திரநாத் டாகூர் எழுதியது)

நமக்கு புறமாக உள்ள உலகத்தை, நினைத்தால் இகலோகத்துக்கு முற்றிலும் மாறுதல் உள்ளது. அதனுடைய அமைப்பும் நிறமும் ஸ்தாபரங்களும் ஒத்துக்கொள்ளக்கூடிய முறையிலும் ஒத்துக்கொள்ளக்கூடாத வகையிலும், ஆச்சரியப்படக் கூடியதும் பயப்படக் கூடியதும், சுகதுக்கங்களாயும் நம்முடைய உணர்ச்சிக்கு விசித்திரமாகவும் தோன்றுகிறது. ஜீரணிக்கக்கூடிய போதுமான ஆகாரத்திற் குறையுள்ள ஒருவன் திரேகத்தின் உயிர் நிலைக்குள்ள ஆகாரத்திற்கு மாற்ற முடியாது. அதுபோல தன்னிடமுள்ள மனோ சலனத்தை வைத்து வெளி உலகத்தை நிறைவுபட தெரியாத ஒருவன் வேஷமாறுதலில் இழந்து போகிறான்.

உலகத்தின் கொஞ்ச வாழ்வை பிரியப்படுகிற மந்தமான ஜனங்களைப்பற்றி மேல்கண்டவைகள் சொல்லப்பட்டது. அவர்களுடைய இருதயத்தில் கொஞ்ச ஜன்னல்களும் சிறிது திறக்கப்பட்டவைகளாயு மிருக்கின்றதோடு பிரபஞ்ச மத்தியில் வெறுத்தவர்களாக நடமாடுகிறார்கள்.

மற்றொரு வகையில் ஆச்சரியமும் அன்பும் பாவுகிறதற்குள்ள கொள்கையுள்ள அதிர்ஷ்டசாலிகளு மிருக்கிறார்கள். அவர்களுக்கு ஒவ்வொரு இயற்கையும் விருந்தாக இருக்கிறது. ஜனத்திரள்களின் முக்கிய நாடியோட்டம் பெரும்பாலும் இரக்க சித்தமுள்ளவைகளா யிருக்கிறது. அவைகளில் வெளி உலகத்தின் சுத்தமான தோற்றம் உண்டாகிறது.

மனதிற்குள் இந்த மாதிரியாக வளர்ந்து கொண்டிருக்கிற உலகமானது உலகத்திற்கு புறம்பாயுள்ள அநேகருக்கு சொந்தமா யிருக்கிறது. மனிதனுடைய இருதயம் மனத்தோடு சேர்க்கப்பட்டதாகவே யிருக்கிறது. கருப்பு வெள்ளை, பெரிது சிரிது, என்றும் விருப்பு வெறுப்பு, ஆசை, மோசம், நல்லது கெட்டது என்றும் மொட்டையாக தெரிவிக்கிற உலகத்தைப்பற்றி திருப்திகாமில்லை. மனித உலகம் புதிது புதிதாயும் வயது வளர வளர துய்மையான எண்ணங்களும், நினைப்புகளும் நிறைந்த வண்ணமா யுள்ளது.

டாகூர்

உலகத்தை விட்டு எப்படித் தப்புகிறதென்றும் அல்லது உலகத்தில் எந்த புடிதாம்கொண்டு இருக்கிறதென்றும், ஒரு கேள்வி கேட்கப்படுகிறது. பிறந்தவுடன் இந்த உலகத்தின் சந்தோஷத்தை அழிவிக்கில்லாமல் காப்பாற்ற வேண்டும். அதன்படி நாளாக நாளாக சந்தோஷம் நிலையமாகிறது. வயது ஆகஆக தெளிவாய் காட்டக் கூடிய பேச்சுகள் மனிதனுடைய அவசியமா யிருக்கிறது.

கலைக்ஞானத்தை சீர்துக்கிப் பார்க்க இரண்டு விஷயங்கள் கவனிக்கும்படியா யிருக்கிறது. ஒன்று சர்வ வியாபகமுள்ள வாதத்தில் எவ்வளவு பேரை இந்த ஆசிரியருடைய மனது கவர்ச்சிக்கிறது. இரண்டு எதை எவ்வளவுதூரம் ஆசிரியர் எடுத்துக் கூறி புகழடைகிறார் என்பது. எந்த இடத்தில் இந்த இரண்டு முக்கிய நோக்கங்களும் சேர்ந்து இருக்கின்றனவோ அந்த இடத்தின் முடிவு மேன்மையாக இருக்கும். ஆனால் இரண்டும் சேர்ந்து ஜயம்பெருவது முடியாத காரியம்.

எவ்வளவுக்கு கலைகளின் திறமை காட்டப்படுகிறதோ அவ்வளவுக்கும் உறுதியான திருப்திகாமளிக்கிறான். எவ்வளவு தூரம் உலகத்தில் பாவுகிறதோ அவ்வளவிற்கு ஜனங்களுக்கு விளையாட்டிடமாகிறது. கலைக்ஞானத்திற்கு முக்கியமாக வேண்டியது புதிது புதிதாக எடுத்து விளக்கக்கூடிய திறமைதான். சொல்லப்படுகிற விஷயம் அற்பமாக இருந்தாலும் விஷயத்தினுடைய திறமை பாஷைக்குத் தகுந்தவாறும் எடுத்துக் கூறுகிறவருடைய திறமையைப் பொறுத்தும் மறைபொருளாக இருக்கும். மேல்கண்ட முறையில் வெற்றி பெருகிற ஆசிரியர்களுக்கு ஜனங்கள் கீர்த்தி என்ற பாத காணிக்கையைச் செலுத்துகிறார்கள்.

எத்தனைவிதமாக ஆசிரியர் எடுத்து விளக்குகிறார் என்று திறமை வெளிப்பட வேண்டுமானால் பாஷையினுடைய அருமையான பொறுக்கெழுத்துக்கள் கொண்டு அலங்கரிக்க வேண்டும்.

ஜோலிக்குத் தகுந்தவாறு மனிதனுடைய உடை சுருக்கமாகிறது. ஸ்திரியைக் கவனித்தாலோ காலத்திற்கு தக்கவாறு அருமையான உடைகளும் நகைகளும் தலைக்கு குஞ்சங்களும் மற்றும் அலங்காரங்களுள்ளவைகளாகவு மிருக்கிறது. பெண்கள் தங்கள் சொந்த நன்மையைக் கருதி மற்றவர்களுடைய இருதயத்தைக் கவர்ச்சி செய்ய வேண்டியதிருக்கிறது. மனிதன் எப்பொழுதும் மனித ரூபமாகவே தோற்றுவிக்கிறான். ஆனால் பெண்ணோ தன்னைப் பிரியப்படும்படி நடந்து கொள்கிறாள். மனிதன் நேர்முகமாகவும் ஒருவரை எதிர்பாராத தோற்றத்துடனும் இருக்க வேண்டிய கடமையுள்ளவனாக இருப்பது நலம். ஆனால் பெண்ணோ மௌனம், மறைவு, சுட்டிச் சொல்லுதல் இவைகளில்லாம லிருக்க முடியாது. அதுமாதிரியாக கலைக்ஞானம் தன்னுடைய பலப்படுத்துகிறதற்கு சீர்பிரமாணம் உவமாலங்காரம் சொல்லின்பமுள்ள பிரயோஜனப்படக் கூடிய சமாச்சாரங்களும் அபிப்பிராயமுள்ளவைகளாகவுமாக இருக்கவேண்டும். அதனுடைய சொல்லோ விஞ்ஞானமாகவும் பாஷை விற்பன்னமாகவுமாக இருக்கக்கூடாது. நாணம் மடம் பெண்களுக்கு எப்படியிருக்கிறதோ அது மாதிரியாக மறைபொருள் உள்ளதாக கலைக்ஞானத்தி லிருக்கவேண்டும். போலியான முறையிலிருக்கக் கூடாது. மேலும் அலங்காரத்தை அதிகப்படுத்தக் கூடாது.

சொல்லி யிருக்கப்பட்டவைகளை சொல்லக் கூடாதென நினைக்க இடம் கொடுக்கக் கூடாது. வார்த்தைகளின்

அர்த்தங்களை படங்கள் மூலமாகவும் பாட்டாகவும் விளக்கிக் காட்டலாம்.

சொல்லுகிறதற்கு சாத்தியப்படா தவைகளை படத்தின் மூலமாக விளக்க வேண்டும். கலைக்ஞானத்திற்கு பட உற்பத்திக்கு முடிவேயில்லை. உவமானம், உருவலங்காரம், ஒட்டலங்காரம் முதலியவைகள் படத்தை விளக்கக் கூடிய அம்சங்களாக இருக்கவேண்டும். பலராம்தாஸ் சொல்லியிருப்பதாவது:— "என் கண்ணுக்குள்ள பறவைகள் உங்களுக்கு தோன்றும்படியாக இருக்க வேண்டும்."

கலைக்ஞானத்திற்கு படமும் பாட்டும் முக்கிய அம்சங்களாகின்றன. படம் எண்ணமாகவும் பாட்டு அதனுடைய ஆசைவாகவுமாக இருக்க வேண்டும். படம் உடலாகவும் பாட்டு உயிராகவுமிருக்க வேண்டும்.

மனிதனுடைய போக்கு கலை நூல்களை பார்க்கக் கூடிய ஸ்திரமான வழக்கமாக இருக்கக் கூடியதில்லை. மனிதனுடைய சுபாவம் புத்தியினாலே ஏற்படக் கூடியதில்லை. இயற்கையாக அமைக்கப் பட்டுள்ளது. நிலையாகவும் சத்தியக் கட்டுப்பாட்டுக் குள்ளாகவுமுள்ள சுபாவம் மிகுந்த சொந்தமான வேலையாம் அத்தியாவசியமாகவுமாக கலை நூல்களுக்கு வேண்டியதிருக்கிறது. பல பிரிவுகளாகவும் மிகுந்த அடுருள்ளவைகளாகவுமாக இருக்கிறது. அதனுடைய ஆழ்ந்த கருத்து உத்திரவில்லாமல் புகுந்த நாணத்திற்கு ஒப்பாக இருக்க வேண்டும். அதனுடைய வியாக்யானம் தந்திரமாகவும் சூதுள்ளவைகளாகவு மிருக்க வேண்டும். அதனுடைய முழு விஷயங்களும் மனதிற்கு பதிய வேண்டுமானால் உத்தமர்களாக இருக்கவேண்டும்.

வியாசர், வால்மீகி, காளிதாசர், இவர்கள் நமக்காக எழுதி வைத்திருக்கிறார்கள்.

இப்பொழுது என்ன சொல்லப்பட வேண்டுமென்பதை ஒரு வார்த்தைக்கு எடுக்கலாம். மனிதனுடைய மனோவிகாரத்திற்கும் நடைக்கும் சம்பந்தப்பட்டதாக கலை நூல்களிருக்கின்றன. மனிதனுடைய இயற்கையும் வெளியிலுள்ள இயற்கை அமைப்புகளும் மனத்திற்குள் பதிய வேண்டும். அப்படிப் பதிவு செய்யப்பட்டவைகளை மொழிகளுக்கு கொண்டு வருகிறதுதான் கலை நூல். சாம்ராஜ்யத்தின் துக்கங்களை நமக்கு எடுத்து கூற வேண்டும்.

கலை நூலானது தனிப்பட்ட ஒன்றுக்கு சொந்தமும் அல்லது உற்பத்தி செய்த ஆசிரியருக்கு சொந்தமுமல்ல. அது ஒரு பரிசுத்த ஞானம். பரிசுத்தம் ஏனென்றால் பாட்டாளியினுடைய சொந்த உற்பத்தி கொண்டது. வெளி உலகம் நல்லது கெட்டதினால் நடை பெற்று வருகிறது. இந்த ஞானமானது ஒவ்வொரு தேசத்திலும் ஒவ்வொரு காலத்திலும், ஒவ்வொரு பாஷையிலும் ஒவ்வொருவருடைய இருதயத்திற்குள்ளும் புகுந்து எப்பொழுதும் நிலையுள்ள சந்தோஷத்தை விளைவிக்க வேண்டும்.

(விஸ்வபாரதி, May 1935).

---

## 141 பிரதிநிதிகளுக்கு உரிமை

காங்கிரஸ் புதிய திட்டம் வருஷாந்திர காங்கிரஸ் மகாநாட்டுக்கு தமிழ் நாடு 141 பிரதிநிதிகளை அனுப்ப உரிமை பெற்றிருக்கிறது. ஜுன் மீ 14உக்குள் சேருகிற மொத்த மெம்பர்களில் 500க்கு ஒரு பிரதிநிதியாக அனுப்ப ஏற்பாடு செய்திருக்கிறார்கள். 70500 காங்கிரஸ் மெம்பர்கள் சேர்ந்தால் மட்டும் 141 மெம்பர்களை அனுப்ப சாத்தியாகுமெனத் தெரிகிறது. மற்றய மாகாணங்களைவிட நமது மாகாணம் பின் வாங்காது என்பது தெரிந்த விஷயம். இது வரையில் 25000 அங்கத்தினர்கள் சேர்ந்திருக்கிறார். பாக்கி மெம்பர்களை குறிப்பட்ட வாய்தாவிற்குள் சேர்க்கும்படிக்கு ஒவ்வொரு ஜில்லா தாலூகா காங்கிரஸ் கமிட்டிகளும் தீவிரமான முயற்சி செய்ய தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டி காரியதரிசிகள் கேட்டுக் கொள்வதோடு ஒவ்வொரு தேசிய பத்திரிகைகளும் காங்கிரஸ் வேலையின் ஊக்கத்துக்கு ஆதரவாக இருக்கும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

---

கிருஷ்ணன்:—கோபாலா ஊண் மிச்சம் உழவிலேயுமில்லை என்ற பழமொழியைக் கேட்டிருக்கிறாயா?

கோபாலன்:—கிருஷ்ணா! கேட்டிருக்கிறேன். உயிரைவிட சுருக்கமான வழி ஊண் மிச்சம் செய்தால் உழவு செய்ய சக்தி யிருக்கப் போவதில்லை. சக்தி குறைய உயிராபத்தாகிவிடும்-

# அபிஸீனியா அரசரின் வாழ்க்கை முறை

அபிஸீனியாவின் அரசர் ஷா ராஸ் துபாரி. இவருக்கு இப்போது வயது 40 ஆகிறது. ராஸ் துபாரி கொஞ்சம் தாடி மீசை யுடையவர். சற்று குள்ளர். பேச்சு, சுபாவம், தந்திரம் யாவற்றிலும் மிகத் திறமை யுள்ளவர்.

அபிஸீனியாவின் தலைநகரான அதஸ் பாபாவில் தான் ஷா ராஸ் துபாரியின் அரண்மனை இருக்கின்றது. இராஜ அரண்மனை என்று பெயரிட்டு அழைக்கப்பட்ட போதிலும், ஆடம்பா அலங்காரத்தில் அரண்மனையைப் போலல்ல. சாதாரண பங்களா வென்றே தான் சொல்ல வேண்டும்.

நாகரிக ஆடம்பா டாம்பீகப் போக்குகளை ஏற்றுக் கொள்ளாமல் எழிய முறையிலே வாழ்க்கை நடாத்தி வருகிற உத்தமர். சொந்தக் காரியாதிகளை குறிப்பிட்ட நேரத்திற்குள் முடித்துக் கொண்டு மற்றய நேரங்களில் இராஜ்ய விஷயங்களை கவனித்து வருவார். குடி ஜனங்களின் நலனை விரும்பி தன் மீதுள்ள பொறுப்புகளை உடனுக் குடனே நிவிர்த்தி செய்து ஜனங்களின் குறைகளைத் தீர்த்து வைப்பதில் கண்ணும் கருத்துமுள்ளவர்.

தனக்குள்ள மூன்றடுக்கு ஆகாய விமானத்திலேறி அரசாங்க காரியமாகவும் நகரின் நிலைகளை தெரியவும் பிரயாணம் செய்து வருபவர். தன் விஷயத்தில் நவீன நாகரிகத்தில் மூழ்கிவிடாதவராயிருப்பினும் தம் குடிஜனங்களுடையவும், தேசத்தினுடையவும் முன்னேற்றத்திற்கு நாகரிக வாழ்கை முறையே சிறந்த தென்று போதித்து ஐரோப்பிய நாட்டைப் பின்பற்றி தன் சமூகத்தையும் இராஜ்ய விவகாரங்களையும் திருத்தி வருகிறவர்.

ஐரோப்பியரைப் பின் பற்றுவதில் தம் தேசத்தினுடையவும் சமூகத்துடையவும் முன்னேற்றம் இருக்கிறதென்று நம்பிய போதிலும், அநுஷ்டானத்தில் கொண்டுவா குடி ஜனங்களை வற்புறுத்துவது கிடையாது. பிரஜைகளை நல்ல விதத்தில் சாத்வீகமாக ஆளுகிறவர் மற்றய அரசாங்கங்கள் போல் யுத்த முஸ்தீபுகளையும் தற்காலத்திற் கேற்ப நவீன யுத்த ஆயுதங்கள் தளவாடங்கள் உள்பட காலாட்படை சிப்பாய் தளவாடங்களும் உடையவர். ஈட்டி, கேடயம், வாள், அம்பு இவைகளை உபயோகிப்பதில் அபிஸீனியர்கள் வல்லவர்கள்.



அபிசீனியா அரசர் ராஸ் துபாரி.

இவர் சிம்மாசனத்திற்கு வந்தபின் இரண்டொரு புரட்சிகள் நடைபெற்றன. புத்தி சாதுரியத்தை உபயோகித்தும், இராணுவ பலத்தைக் கொண்டும் ஐரோப்பிய ராஜாங்க உதவிகளைக் கொண்டும் புரட்சிக் கூட்டத்தை அடக்கிவிட்டார். நாட்டில் அமைதி நிலவியிருந்து வருகிறது.

### தற்போதிய அபீஸீனிய இத்தாலியப் போராட்டம்

சின்னுட்கட்கு முன்பு அபீஸீனியாவுக்கும் இத்தாலிக்கும் ஓரிடத்தில் போர் மூண்டு அது சம்பந்தமாய் இத்தாலியப் படையினர் எழிய அபிஸீனியப் படையினரை முறியடித்து விட்டனரென்றும் இவர்களுக்குள் ஏற்பட்ட கலகம் இனியும் கொழுந்து விட்டெரியு மென்றும் செய்திகள் பத்திரிகைகளில் வெளிவந்திருப்பதை வாசகர்கள் அறிந்திருக்கலாம்.

இதாலிக்கு அபிஸீனியாவை ஒப்பிட்டுப் பார்த்தால் அபிஸினியா மிகவும் ஏழை தேசம்தான். இராணுவ பலத்திலும் நாகரிகத்திலும் யுத்த தளவாடங்களிலும் பதின் மடங்கு தாழ்ந்தவர்களேதான்; ஆனல் அபீஸீனுயா மன்னரும் அவரது அரசாங்க ராஜ்ய நிபுணர்களும் மிகவும் சாமர்த்திய சாலிகள். காரியங்கள் விபரீதமாய் முடிந்து போகாமலிருப்பதற்குரிய ஏற்பாடுகளை முன் யோசனையோடு செய்து கொள்வர். ஆகவே தான் இத்தாலி தன்னை தாக்க வந்த மேற் கூறப்பட்ட போரையொட்டி சர்வதேச சங்கத்தாரிடம் அபிஸீனியா பிராது கொடுத்து அதன் தீர்ப்பை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறது.

இத்தாலி சர்வாதிகாரியான முசோலினுக்கு இப்போது வயது 40 ஆகிறது.

---

குரு:—சிஷ்யா! பொய்யே பேசக் கூடாது. மெய் பேசவேண்டும்.

சிஷ்யன்:—குருவே, பொய்யான வாழ்க்கையில் மெய் பேசி ஆகுவதென்ன? அழிந்து போகிற மெய்க்கு மெய் பேச வேண்டுவது அவசியமா?

---








# ஞானசேகரி

(வே. பெ. இர. கங்காராம்)

"ஞானசேகரி! இன்னும் நீ ஒரு முடிவுக்கு வரவில்லையா?" என்று கேட்டுக்கொண்டே சத்ய மன்னன் தன் அரண்மனை அந்தப் புரத்திற்குள் நுழைந்தான்.

அதற்கு ஞானசேகரி, "தந்தையே! என் முடிவைத் தங்களுக்கு அன்றே தெரிவித்து விட்டேனே" என்று பணிவுடன் சொன்னுள்.

உடனே, சத்ய மன்னன் முகம் சினத்தால் சிவந்தது. "உன் பிடிவாதத்தை இன்னும் விடவில்லையா? எத்தனையோ இளவரசர்கள் இருக்க, நீ அந்தச் சண்டாளனையே மணக்கப் போகிறேனென்கிருய்! அந்தப் புழு எதில் சிறந்தவன்? அரசகுலத்தில் உதித்த நீ ஓர் அற்பனை மணப்பது தகுதியா? ஞானசேகரி! நன்ருக யோசித்துப் பார்" என்று அம்மன்னன் சொல்லிவிட்டு அந்தப்புரத்தை விட்டு அகன்ருன்.

அந்தோ! ஞானசேகரியின் நீண்ட கண்கள் நீரைக் கக்கின. "ஆ உலகமே! நீ பாவியென்று 'காதல் மணம்' என்பது உன்னை விட்டு அகன்றதா? பாசற்ற காதலுக்கும் உண்டோ குல வேற்றுமை? ஒரு பெண்ணை அவள் மணத்திற்குமுன் என்றுங் கண்டிராத ஓர் ஆடவனுக்குக் கொடுப்பதா மணம்? காதலுக்குக் கலியாணமா; கலியாணத்திற்குக் காதலா? காதலற்ற தம்பதிகளிடம் இன்பத்தேவி நடனமாடுவாளா? அவர்களிடம் இன்பத்தேவிக்குப் பதிலாக துன்பத் தேவியன்றோ நடனமாடுவாள்? காதலர் இருவரும் கருத்தொருமித்தால், அவர்களிடை இன்பம் தோன்றும். கணவனுடன் இருந்து அநுபவிக்கப் போவது யார்? நான் தானே? பின், என் இஷ்டப்படி ஒருவரை மணந்து கொள்வதில் ஏன் என் பெற்றோர் தலையிட்டுத் தடைசெய்ய வேண்டும்? என் தந்தை இவற்றை அறியார் போலும்!

"என் காதலர் ஓர் சாதாரண பிரஜை யென்பது உண்மை. அதனுலென்ன? நாங்கள் இருவரும் 'காதல்' என்ற சங்கிலியால் கட்டப்பட்டோம். அவர் முகம் என்முன் நிற்கிறது. அதோ, அவர் இரு கருவிழிகள்—என்னுள்ளத்தைக் கொள்ளைகொண்ட விழிகள்—என்முன் தோன்றுகின்றன! உலகமே! காதல் மணம் என்று ஒளி பரப்புகின்றதோ அன்றுதான் நீ முன்னேற்றமடைவாய். என் போன்றவர்களின் கண்ணீர் உன் சீரை அழிக்கும்!" என்று ஞானசேகரி புலம்பிக்கொண்டிருந்தாள்,

அப்போது தோழியாகிய சந்திரவதி தோன்றி "அம்மா ஏன் கலங்குகின்றீர்கள்? அழுதென்ன பிரயோசனம்?" என்ருள்.

உடன் ஞானசேகரி :—பின் என்ன செய்வது? தந்தையார் பிடிவாதம் செய்கிருர். உலகமும் ஒரு அரசகுமாரி ஒரு சாதாரண மனிதனை மணப்பதென்ருல் பழிக்கும். நான் பொறுவாக கொள்ளவும் முடியாது, தள்ளவும் இயலாது தவிக்கின்றேன்.

நெடு நேரமாக சந்திரவதி மௌனமாக இருந்துவிட்டு "அம்மா ஒரு தந்திரம் செய்யலாமென்று யோசிக்கின்றேன். தந்தையை சரிபடுத்த அது ஓர் வழியென்று தோற்றுகிறது எனக்கு" என்ருள்.

ஞானசேகரி :—என்ன வழி?

சந்திரவதி காதில் ஏதேதோ இரகசியம் கூறினுள்.

ஞானசேகரி கூர்ந்து கேட்டுவிட்டு "தோழி நீ செய்வாயா? நான் துணை நிற்கின்றேன்...................(குதூகலம் மிகுந்து) அடி! அகப்பட்டுக் கொள்ளக் கூடாது......................" என்ருள்.

சந்திரவதி சிரித்துவிட்டு :—நீங்கள் பயப்படவேண்டாம்...................நான் செய்து முடிக்கிறேன்.

## II

சில நாட்கள் சென்றன. அரசர் தம் புதல்வியின் துணிச்சலை மறந்திருப்பார்.

அப்போது அரண்மனையில் ஒரே குழப்பம். எங்கு பார்த்தாலும், "மன்னனின் மகுடம் காணமல் போய்விட்டது" என்ற ஒரே பேச்சு. யுத்த வீரர்கள் எல்லாம் ஆயுதபாணிகளாய் குதிரைகளின் மீதேறிக்கொண்டு பறக்கிறார்கள்.................

உடைந்த மேற்றளமும், திறந்த கதவும் ஒடிந்த சாவியும் பார்த்தால் திருடன் அசாதாரணமானவனா யிருத்தல் வேண்டுமென்று எல்லோரும் நினைக்கிறார்கள். சர்வ சமர்த்தனாகிய சத்திய மன்னனின் அரண்மனையில் கிரீடம் திருட்டுப் போவதென்றால் இலேசான செயலல்ல. எனவே வீராதி வீரர்களும், சூராதி சூரர்களும், தீராதி தீரர்களும் பகீரதப் பிரயத்தனம் செய்தனர். துப்பறியும் உத்தியோகஸ்தர்கள் போட்ட குட்டிக் காணம் கொஞ்சமல்ல. எனினும் மகுடம் கிடைத்தபாடில்லை. மகுடம்தான் போகட்டுமென்றால் களவாடிய திருடனின் வாடைகூட அகப்படவில்லை. மன்னனுக்கு வந்த சங்கடம் கொஞ்சமல்ல.

ஒருநாள் அவன் ஓய்ந்த மனத்தோடு, காய்ந்த கண்களோடு தன் சோபாவில் சாய்ந்திருக்கையில், பாய்ந்து வந்தாள் ஞானசேகரி. அவளது முகத்தில் கிரீடம் காணமற் போன பெரும் பரபரப்பு எரிந்து கொண்டிருந்தது போல் தோற்றியது.

உடன் அவள் தந்தையை நோக்கி "தந்தை கிரீடம் திருட்டுப் போவதென்றால் பெரும் பெரும்—மானமல்லவா? அரசுக்கு அதைவிட பங்கம் வேறில்லையே. ஆகவே அதனை பெறுதற்கு யாது செய்திருக்கிறீர்கள்?" என்றாள்.

மன்னன்:—முடியைக் கொண்டு வருபவருக்கு இரண்டு தாலூகாக்களை சன்மானம் அளிப்பதாகப் பறைசாற்றியிருக்கிறேன். ஆனால் மந்திரிகள் வழக்கம் போன்று அரசகுமாரியைப் பரிசாக மணஞ்செய்து வைக்கலாமென்று சொல்லச் சொல்லுகிறார்கள. அதுபற்றிய யோசனைதான் என் மனதைப் புண்படுத்துகின்றது.

ஞானசேகரி:—தந்தாய்! தள்ளாத காலத்தில் தங்களுடைய அவமானத்தை சிதைத்தொழிக்க வேண்டுவது தங்கள் புதல்வர் கடன். ஆனால் நிர்ப்பாக்கிய வசமாக ஆண் மகவு பெறும்பேறு பெற்றீர்களில்லை. அவர்கட்குப் பதிலாக நானே இருக்கிறேன். எனவே என்னைக் கொண்டு கிரீடத்தை நீங்கள் பெற்றுக் கொள்வதே சால்புடையது. யாதும் மனக் கலக்கமின்றி "கிரீடத்தைக் கொணர்வார்க்கு என் மனை தானம் செய்வேன்" என்று பறைசாற்றுக. நான் தங்கள் நலனுக்காக எத்தியாகமும் புரிய அஞ்சவில்லை.

இந்த வார்த்தைகளைக் கேட்டதும் மன்னன் ஞானசேகரியைக் கூர்ந்து நோக்கினான். அவன் மனதில் பலப்பல எண்ணங்கள் உதித்தன வென்பது முகத் தோற்றத்தால் புலப்பட்டது.

## III

முன் சொன்னவை நடந்த இரண்டு நாட்களுக்குப்பின், இரவு தன் பூங்காவனத்தில் ஞானசேகரி உலாவிக் கொண்டிருக்கிறாள். அவள் பக்கத்தில் ஓர் ஆடவன் நின்று கொண்டிருக்கிறான். மந்த மாருதன் இருவரையும் தன் கரங்களால் கட்டிக் கொண்டிருக்கின்றான். ஆதித்தன் மறைந்து பட்டதால் இருள் மூடிக் கிடக்கின்றது. மதியின் கிரணங்கள் மெல்ல தலையெடுக்க ஆரம்பித்திருப்பதின் அடையாளங்கள் காணப்பட்டன. அப்போது ஞானசேகரி பக்கத்தில் 'கலகல' வென்று நகைக்குஞ் சப்தம் எழுந்தது.

ஞானசேகரி, "காதலா, ஏன் சிறிக்கிறீர்கள்?"

சிரித்த ஆடவன் "பிரியே! என்னையடைய நீ செய்த தந்திரத்தை நினைத்து நினைத்துச் சிரிக்கிறேன். அரசன் மகுடத்தை எடுத்து மறைத்து வைத்துக் கொண்டு அவனைக் கொண்டு விசேஷமாகப் பறை சாத்த வைத்துவிட்டாயே. என்ன சாமார்த்தியம் உனக்கு! பெண்கள் மிக தந்திரசாலிகள் என்பதற்கு நீயொரு நல்ல எடுத்துக்காட்டு. உனக்கு உதவி நின்ற தோழி சந்திரவதியையும் புகழவேண்டும். உன் தந்திரத்தில் தேசமே மயங்கிப்போய் விட்டதே. திருட்டு உண்மையாகவே நடைபெற்றிருக்க வேண்டுமென்று கருதி அரசன் தன் ஆட்களைப் படுத்திய பாடு கொஞ்சமல்ல.

ஞானசேகரியும் சிரித்தாள்.

பின் வாலிபன்:—ஞானசேகரி! நாளை நான் கிரீடத்தைக் கொடுத்தால் திருடன் யாரெனக் கேட்டால் என்ன சொல்வேன்?

ஞானசேகரி:—அது இரகசியமென்றும், நான் அபயமளிப்பதாக வாக்குக் கொடுத்துப் பெற்றிருக்கின்றேனென்றும் கூறி விடுங்கள்.

அப்போது தோழி சந்திரவதி வந்தாள்.

வாலிபன்:—இதோ வருகிறாள் கள்ளி. சந்திரவதி! நீ செய்த தந்திரத்திற்கு நான் எவ்வளவு கடமைப் பட்டிருக்கிறேன். உன் கைகள் தான் மேன்மாடியை எப்படி இடித்து விட்டனவோ?

சந்திரவதி விழுந்து விழுந்து நகைத்தாள்.

மறு நிமிஷம் ஞானசேகரியின் கையிலிருந்த ஒரு பொன் மாலை தோழிக்குச் சென்றது.

---



சென்ற புதனன்று, மகாத்மா காந்தி பம்பாய் வந்து இறங்கி, விக்டோரியா டர்மினஸ் ஸ்டேஷனை விட்டு சர்தார் படேலுடனும், B. P. C. C. மெம்பர்களுடனும் போகும் காட்சி. —Cou.



விசாரணையின்றிச் சிறைப்படுத்தப்பட்டிருக்கும் தேசபக்தர்கள் தினம், பம்பாய் சௌபாத்தி கடற்கரையில் சென்ற ஞாயிறன்று நடைபெற்றது. திரு. நரிமான் கூட்டத்தில் பேசுகிறார். —Cou.




எவரெஸ்ட் மலையை இன்னும் ஏறிப் பார்ப்பதற்காக ஒரு கோஷ்டியார் பம்பாய் வந்திருக்கின்றனர். இவர்கள் முறையே இடப்புறமிருந்து மைக்கேல் ஸ்பெண்டர், டாக்டர் சார்லஸ் வாரன், E. E. ஷிப்டன் (தலைவர்), E. H. L. விக்ராம், கெம்ப்சன் ஆம். —S.P.B.




இங்கிலாந்து டார்க்வே தோட்டமும், நகரத் தோற்றமும்.





"ஞானசௌந்தரி" என்னும் தமிழ் பேசும் படத்தில் ஞானசௌந்தரியாக நடிக்கும் மிஸஸ் சரோஜனிதேவியும் வேலனாக நடிக்கும் மிஸ். அஞ்சுகமும்



கோயம்புத்தூர் சகுந்தலா பிலிம்ஸ் கம்பெனியாரால் தயாரிக்கப்பட்டிருக்கும் "ஞானசௌந்தரி" என்னும் தமிழ் பேசும் படத்தில் பிலேந்திரனாக நடிக்கும் ஸி. வி. பந்துலு.



கோயமுத்தூர் பரமேஸ்வர் ஸவுண்டு பிக்சர்ஸ் கம்பெனியாரால் தயாரிக்கப்பட்ட "பக்த ராமதாஸ்" என்னும் தமிழ்ப் பேசும் படத்தில் ஒரு காட்சி. இது கூடிய சீக்கிரம் வெளிவரும்.

# பாரதியாரும், காதலும்

(எஸ். கே. எஸ்.)

மக்கள் யாரும் நயந்தேத்திப் போற்றிப் புகழும் ஓர் அரிய செம்பொருள் காதல். சாதாரணமாக அதற்கு ஆசையென வெறுந் தமிழில் பொருள்கூறலாமாயினும் எவ்வளவு அளக்கினும் (அது) அடங்கா கருத்துடையது. பற்று, தளை, பிணிப்பு, பந்தம், பாசம் என்கின்ற அநந்தம் வார்த்தைகளெல்லாம் காதலின் அணுவுக்கும் ஈடு இல்லா பொருள் கொண்டவைகளே. உயிர், இன்பம், கடவுள் செல்வ மெல்லாம் காதலுக்குக் கீழ்பட்டனவே.

உலகினர் ஒரு பருவமங்கைக்கும் ஒத்த காளைக்கும் இடையில் மாற்றமுடியாதவாறு நிகழும் கட்டுப்பாடே காதல் என்று சொல்கின்றனர். யாம் அக்கட்டுபாடு எவ்வளவுக் கெவ்வளவு நெருங்கிய பலமுடைத்திருக்கின்றதோ அதைப் பொறுத்திருக்கும் காதலின் பொருள் என்று கூற விரும்புகிறோம். அப்பொருளுடைமையை மனமார நாம் தியானிக்கும் பொழுது உலகமெலாம் காதல் மயமாகத் திகழாதோ என ஏங்குகின்றோம்.

காதலுக்கு ஈடோ இணையோ கிடையா. அதன் உச்சஸ்தானத்தில் நாம் பூமியில் காணும் அனைத்தும் அணுஅளவினதேயாகி விடும். காதல் வயப்பட்டார்க்கு காடோ மலையோ, நதியோ எரியோ, கொலையோ கொடுமையோ, கத்தியோ பிரயோகமோ பெரியதல்ல.

> "Lovers will climb up moun-
> [tains
> And meet at fountains"

காதலர் எத்தகைய இடரும் நோக்கார்; எத்தகைய விளைவையும் உன்னார். பித்தரும், பேதையரும் அவரோடொப்பர். மேதாவிகளும் முனிவரும் அவரை நிகர்ப்பர். எத்தகைய மூளைக்கும் எட்டாத தந்திரம் அவர்களை எட்டும். எந்த மடையனும் செய்யாத அசட்டுத்தனத்தைச் செய்வர். கோழைகட்கும் காதல் உதிக்குமிடத்து உதிக்கும் பலம் ஒதுங்காத்ததல்ல. காதல் தோன்றியாங்கு கடவுள் சக்தி தோன்றுமென்று கடவுள் பெருமை விரிப்போர் விளம்புவர். நாஸ்திகர்கள் கடவுள் சக்திக்கும் மேற்பட்டது காதல் சக்தி என்று நவில்வர். நடு நிலைமையுடையார் கடவுள் சக்தியே காதல் சக்தியெனக் கூறுவர். மேனாட்டு நாடகாசிரியர் திலகமாகிய ஷேக்ஸ்பீயர் இலக்கியத்தோடு காதலை பிசைந்து உலகிற் களித்து விட்டு,

> Love is a Thorn that belongs



திரு. எஸ் எஸ். நிம்பல்கார். பம்பாய் உடற்பயிற்சிக்கூட ஆசிரியர். சமீபத்தில் 13 மணி 13 நிமிஷம் இடைவிடாது லாத்தியை சுழற்றி பார்ப்போரை பிரமிக்கச் செய்தார்.

—Cou

> to the Rose of Youth

என்ற வார்த்தைகளாலும்

> Love is Coal that cannot be Coold

என்ற சொற்றொடர்களாலும் விளக்கிக் கூறுவது படித்துப் படித்து நுகர வேண்டுவதாகும்.

நவீன புலவர் திலகமாய் மிளிர்ந்து மறைந்த கவி பாரதியார் தம் செந்தமிழ்த் தீம்சொற்களில் காதல் தேனைப் பெய்து, குழைத்தளித்திருப்பது படிக்கும் பேறு பெற்றோர்க்கு இன்ப உலகு காட்டுவதாகும். பாடிய வாய் பாலூறும். அப்பாரதிப் பெருந்தகையார், பாசுரங்களில் காதல் என்பதே கனிந்தெழுந்து நிற்பது. அவர் வீரம் பாடும் வித்தகரெனினும் அவ்வீரமும் காதல் பற்றி யெழுந்த வீரமாயிருத்தல் வேண்டுமென்கின்றார். தேசப்பற்றுச் சொட்ட அவர் பாடும் இடங்களிலும் காதல் சொட்டே துளிக்கக் காண்கின்றோம். கடவுளைப் பணியுமிடங்களிலும் தமக்கும் கடவுட்கட்கும் காதல்தனையே பெற்றிருப்பதாய் உருவகப்படுத்துகிறார். காரணம் "காதலிங்கே உண்டாயிற் கவலையேது" என்பதுதான். எனவே பாரதியார் மக்களை யெல்லாம் காதல்வழி உய்க்குவானாய் "ஆதலினால் காதல் செய்வீர் உலகத்தீரே!" என முழங்குகின்ற முழக்கம் உய்த்துணர வேண்டுவது.

காதல் தோன்றியவுடன் நாணமும் உண்டாகின்றது. புதிதாக காதல் தோன்றிய பெண், தனது காதல் உணர்ச்சியை வெளிக்காட்டமாட்டாள். நீண்ட நாள் அடக்கி வைத்திருக்கவும் முடியாது. இக்கருத்தை தமிழுக்கு புத்துயிரும் தமிழகத்திற்கு புது வாழ்வும் அளித்த சுப் பாரதியார் வெகு நயமாக குயில் பாட்டில் கூறியிருக்கின்றார்:—

காதலுற்ற செய்தியினை, மாதர்,
உரைத்தல் வழக்கமில்லை யென்றறிவேன்
—ஆனாலு என்னைப்போல் அபூர்வமாங்
காதல் கொண்டால்—தானு உரைத்த
லின்றிச் சாரும் வழியுளதோ—

புலவர் கூறிய இவ்வுண்மை சரித்திர அனுபவமாகும்.

காதல் மக்கள் இதயத்தில் அடங்கியே (Latent) ஆதியில் காணப்படும். உண்மை காதல் காடுமூடானது என்பது பாரதி கூற்று. ஷேக்ஸ்பியரும், இக்கருத்தை தமது ரோமியே-ஜூலியத் (Romeo and Juliet) என்ற நாடகத்தில் "True love never did run smooth" என்று அருளியுள்ளார். காதல்கொண்ட பெண்கள் தலைவர்களை சந்திக்க நடுநிசியில் அணுவளவேனும் அச்சம் கொள்ளாது குறித்த இடம் செல்வார்கள். எவ்விதத் தடையோ, இடையூறுகளோ, இருந்த போதிலும் பொருள்படுத்த மாட்டார்கள். இத்தகைய சம்பவமொன்றை பாடிய வாய் பாலூறும் பாரதியார் உருவகப்படுத்தியிருப்பதை பாருங்கள்.



"மிக்க நலமுடைய மரங்கள்—பல
விந்தை சுவையுடைய கனிகள்—எந்தப்
பக்கத்தையும் மறைக்கும் வரைகள்
—அங்கு
பாடி நகர்ந்து வரும் நதிகள்.
நெஞ்சிற் கனல்மணக்கும் பூக்கள்
—எங்கும்
நீளக்கிடக்கு மலைக் கடல்கள்—மதி
வஞ்சித்திடும் அகழிச் சுனைகள்
—முட்கள்
மண்டி துயர்கொடுக்கும் புதர்கள்.
ஆசைபெற விழிக்கும் மான்கள்
—உள்ளம்
அஞ்சக் குரல் பழகும் புலிகள்
—நல்ல
நேசக் கவிதை சொல்லும் பறவை
—அங்கு
நீண்டே படுத்திருக்கும் பாம்பு
தன்னிச்சை கொண்டலையும் சிங்கம்
—அதன்
சத்தத்தினில் கலங்கும் யானை
—அதன்
முன்னின்றோடும் மிகமான்கள்

சூழ்ந்தவிடத்தில் காதல் கொண்டார் வருவரென்கின்றார் பாரதியார்.

இவ்வித பயங்கரமான இடத்தில் ஒரு பெண் தன்னந்தனியளாக வர எண்ணம் கொள்வாளா?

உண்மைக் காதல் தோன்றியவுடன் பயமென்னும் அரக்கன் வீழ்த்தப்படுகிறான். இது அனுபவ பூர்வமான உண்மை. இதைப்போலவே ஆடவனும் காதல் கொண்ட அணங்கின் இங்கித மறிந்து நடப்பதற்கு தன்னுயிரையும் பொருட் படுத்தாதிருப்பதைக் கண்டு வருகின்றோம். இக் கருத்தையும் பாரதியார் விட்டு விடவில்லை.

மறு பிறப்பில் கூடவும் காதலர் கூடி வாழ்வர் என்கின்றார் பாரதியார் இதனை:—

"நூற்றிரண்டு மலைகளைச் சாடுவோம்
கண்ணிடை பெண்ணொருத்தி
பணியிலே

என்பதால் காண்க.

ஒரு ஜன்மத்தில் கூடாத காதலர்கள் மறு ஜன்மத்தில் கூடுவரென்பது புத்த மதக் கோட்பாடு. இதனை பாரதியார் ஒத்துக்கொள்கிறார். இதனை ஓரிடத்தில்,

இன்னும் நாம் பூமியில்
தோன்றிடுவோம்.
பெண்ணே நினைக்கண்டு காமுறுவேன்
கலந்தினிது வாழ்ந்திடுவேன்;
இன்னிப் பிறவியுண்டு
மாதரசே இன்பமுண்டு
நின்னுடனே வாழ்வேன்
இனிநேரும் பிறப்பினிலே;

என்ற அடிகளால் விளக்குகின்றார்.

உயரிய உணர்ச்சியாம் காதலை போற்றி வாழ்வதே மக்களின் கடமையாகும். Love is divine என கூறியிருப்பது இதுபற்றியே. இவ்வாறு மிகவும் மேன்மை வாய்ந்த காதலை அழிக்க மக்கள் முயற்சிக்கின்றனர். இவ்விதத்தில் இழிமக்களின் நிலைமையை பாரதியார் வர்ணித்திருப்பது சாலவும் உண்மை பயப்பதோடு சிறந்த ஓர் படிப்பினையுமாகும். நாடகத்தில் காவியத்தில் காதலென்றால் உவகை கொண்டு உற்சாகம் கொள்வதும் இம்மாந்தர்கள் வீடகத்தே கிணற்றோரத்தில் காதலரிருவர் கலந்துறவாடுவதைக் கண்டு மனம் புழுங்கி, அழிக்க முயல்வது கடைந்தெடுத்த மடமையென்கின்றார்.

உண்மைக் காதல் பாசத்திலீடுபட்டவர்கள் தாம் கொண்ட காதல் கைகூடாவிடில் உயிரை விட்டு விடுவார்கள். நமது கவிஞரும் இக் கருத்தை தெளிவாக விளக்குகின்றனர்.

காதல், காதல், காதல்,
காதல் போயின் காதல் போயின்
சாதல் சாதல் சாதல் என்கிறார்.

காதல் கைகூடாவிடில் பயித்தியம் பிடிப்பதையும் பார்க்கிறோம். பயித்தியம் என்றால் உண்மையில் அல்ல—பயித்தியம் பிடித்தவர்கள் போன்ற செய்கைகளில் உழல்வதைக் காண்கிறோம். நம்மாழ்வாரின் திருவாய்மொழியில் இதே மாதிரி பித்தேறியவனின் செய்கை வர்ணிக்கப்பட்டிருக்கின்றது:—

கூத்தர் குடமெடுத்தாடில்
கோவிந்தனாமெனா வோடும்—
வாய்ந்த குழலோசை கேட்கில்
மாயவனென்று மையார்க்கும்—
ஆய்ச்சியர் வெண்ணைக் காணில்
அவனுண்ட வெண்ணை ஈது என்றும்—
பேச்சி முலை சுவைத்தார்க்கு என்
பெண் கொடியேறிய பித்தே—
(இது தாயின் கூற்று.)

நமது பழந்தமிழர் காதலிலேயே கடவுளைக் கண்டனர். அன்பிலே சிவத்தை கண்டனர். கடவுளுணர்ச்சி என்னும் தனித்த ஓர் உணர்ச்சி கண்டனரோ என்பது ஐயுறத் தக்கதாகும். வடமொழியில் வழங்கப்படும் பக்தி, காதலுக்கு ஈடாமோ?

நெஞ்சமென்னும் பாறையிலே அன்பெனும் தேன் ஊறி ததும்பி ஓடி இன்பகடலில் விழுகின்றது. காதல் வழியும் கடவுள் வழியும் காடு மூடானதே. இதனை பனியின் என்னும் ஆங்கில ஆசிரியர் Bunyon's pilgrim's progress (சன்னியாசியின் பிரயாணம்) என்னும் நூலில் விளக்கியுள்ளார். இதனைப்பற்றி விரிவாக இன்னொரு சந்தர்ப்பத்தில் விளக்குவோம்.

—

# எஸ். ஐ. ஆர்க் காரர் தொல்லை

"அம்பி"

அன்புள்ள நாராயணசாமி,

க்ஷேமம்; க்ஷேமம் பெருக வேண்டும். இந்த வாரம் உனக்குக் கடிதமெழுத விசேஷமான விஷய மொன்றுமில்லை. நேற்று நான் தென்னிந்திய ரயில்வேயில் (எஸ். ஐ. ஆரில்) சுமார் 200 மைல் தூரம் பிரயாணம் செய்தேன். அப்போது நான் ரயிலில் நேரில் கண்ட சில தொல்லைகள் மனதில் அழுந்தி யிருக்கின்றன. அவற்றை "எஸ். ஐ. ஆர். காரர்கள் தொல்லை" என்ற தலைப்பில் எழுதலாமென்று நினைக்கிறேன்.

எஸ். ஐ. ஆர்க் காரர்கள் செய்யும் தொல்லைகளாவன :—

(1) ரகர றகர பேதம் தெரியாது செய்யும் பாஷா சித்ரவதை பொறுக்க முடியாது.

(2) இந்துக்கள் வேண்டாமென்று ஒழித்துத் தள்ளிய ஸ்தல புராணங்கள், மூர்த்தி விசேஷங்கள், விழா விசேஷங்களெல்லாவற்றையும் நினைப்பூட்டி, அச்சிட்டு, மாபெரும் மத பாதகமும் பகுத்தறிவுக் கொலையும் செய்து வருகிறார்கள்.

(3) திருடர்களை எச்சரிக்கையாயிருந்து தொழில் நடத்தும்படிச் சொல்லி நம்மால் அவர்கள் திருட்டைக் கண்டு பிடித்துவிட முடியாதபடி செய்து விடுகிறார்கள்.

(4) நம்மை வண்டியிலேற்றி தாழ்ப்பாளைப் போட்டுப் பூட்டி, பிச்சைக்காரரையும் உடன் அடைத்து விடுவதால் பிச்சைக்காரர்களிடமிருந்து தப்பித்துக் கொள்ள முடிவதில்லை.

(5) அதேபோல சில்லரை வியாபாரிகள் சிலரையும் கதவை மூடி யிருக்கும் நம்மோடு பிரயாணம் செய்யவிட்டு விடுவதால் எப்படியும் காசைப் பிடுங்கிக் கொண்டுவிடுகிறார்கள். சிறு குழந்தைகளோடு பிரயாணம் செய்தால் இந்த வியாபாரிகள் குழந்தைகட்கு ஆசையை யூட்டிக் காசைப் பிடுங்கும் மாதிரிக்கு 10 வருட சிறைத் தண்டனை போட்டாலும்கூட தீராது.

(6) கணக்கற்ற ஜனங்களை வண்டிகளில் அடைத்து கல்கத்தா இருட்டறை எப்படியிருக்குமென்று சரித்திர பாடம் படிப்பிப்பதோடு, மனிதர் கூடுமிடத்தில் சூடு எவ்வளவு பெருகும், வியர்வை எப்படி யொழுகுமென்று உணர்த்தி சுகாதார பாடம் கற்பித்து, எந்தக் கஷ்டத்திலும் பொறுமையா யிருக்கும் நல்லொழுக்க பாடத்தைப் பயிற்றி விடுகிறார்கள்.

நெருக்கடி யென்றால் என்னவென்பது எஸ். ஐ. ஆர்க் காரர்களைப்போல எவரும் படிப்பிப்பதில்லை.

(7) நாட்டில் எவ்வளவு மழையில்லாமற் போனாலும், எவ்வளவு பணமுடை யேற்பட்டாலும், எந்தக் குடும்பம் எப்படிப் போனாலும், தனக்குத் தரவேண்டுவதில் மாற்றமில்லை என்று டிக்கட் கட்டணம் மூலம் அசையாத் தன்மையைப் போதிக்கும் எஸ். ஐ. ஆர்க் காரர்கள் பெருமதிக்கு சமமாக வரி வசூலிக்கும் அரசாங்கத் தயவைத்தான் சொல்லலாம்.

(8) நாட்டில் பொது உடமைப் பிரசாரம் பரவ எஸ். ஐ. ஆர்க் காரர்கள் காரணமாகின்றார்கள்.

(9) 'மக்களின் வாழ்க்கையாகிய பிரயாணம் முழுதும் எச்சரிக்கை மயம்' என்பதை அவர்கள் போதிக்கும் முறைக்கு வண்டிக்குள் தொங்கும் போர்டுகளைப் பார்த்தால் போதும்.

(10) மனிதனுக்கு மேலே எப்போதும் அபாயம் தொங்கிக் கொண்டிருக்கிறதென்னும் தத்துவத்தை எஸ். ஐ. ஆர்க் காரர்கள் சித்திரித்துக் காண்பிக்கிறார்கள்.

(11) தேயிலை பானத்தைப் பரப்பும் பெரும் கைங்கர்யத்தை எஸ். ஐ. ஆர்க் காரர்கள் செய்து வருவதால் தேத் தண்ணீர் வியாபாரிகள் உபசாரப் பத்திரம் வாசித்தளிக்கக் கடமைப் படுகிறார்கள்.

(12) ராகு காலம்; குளிகை காலம், வாரசூலை, சகுனம் முதலியவற்றைப் பார்க்க விடாது, இந்துமத ஆசாரபங்கம் நாட்டில் பரவ காரண பூதர்களா யிருக்கின்றார்கள் எஸ். ஐ. ஆர்க் காரர்கள்.

(13) கக்கூசுக்குள் பல தடவை தண்ணீர் இல்லாமல் செய்து விடுவதன் மூலம், ஐரோப்பிய சௌச முறையை இந்தியாவில் பரப்பி வருகிறார்கள்.

(14) வண்டிகளை அமைத்து ஓட்டும் முறையால் 'உலகில் ஒன்றேனும் நிலைத்திருப்பதில்லை; எல்லாம் அசைவுடையதே' என்று போதிக்கிறார்கள்.

இன்னும் இதுபோல் பலவுண்டு. சமயம் கிடைத்தால் பின்னடி எழுதுகிறேன். இங்கு நான் எழுதியதில் தவறிருந்தால் ஊழியன் ஆசிரியருக்கு எழுது; எனக்குத் தெரிவித்து விடுவார்.

அன்புள்ள,

"அம்பி."

# எதிர்கால இந்தியாவில் கலையும் விஞ்ஞானமும்

வாழ்க்கை ஒரு கலை. வாழ்வது ஒரு வித்தை. ஆகையால் கலையும் வித்தையும் ஒரு தேசத்தின் ஆட்சியில் மிகவும் முக்கியமான அம்சங்களாகும்.

இந்தியாவில் கலையும் விஞ்ஞானமும் வளர்வதற்குள்ள ஏதுக்களைச் சிறிது கவனிப்போம். நம் நாட்டில் அவ்விரண்டும் தற்காலத்திலும் முற்காலத்திலும் இருந்த நிலையை ஆராய்ந்து பார்க்க சில உண்மைகள் வெளிப்படுகின்றன. அவைகளைப் பற்றி அநேகர் பேசியிருக்கிறார்கள். அதை விட அநேகர் எழுதியிருக்கிறார்கள். ஆனால் ஒருவராகினும் அவைகளை நாட்டில் வளர்ப்பதற்குத் தகுந்த வழிகளை எடுத்துக் காட்டினரில்லை.

பொதுவாக நம்மிந்தியாவை கலையிலும் மற்ற நாகரிகத்திலும் முதிர்ந்து விளங்கும் இதர நாடுகளோடு ஒப்பிட்டுப் பார்ப்போமானால் நம் நாட்டின் சீரும் சிறப்பும் இறந்து விட்டதென்றே ஒரு வாறு கூறலாம். தேடிப்பார்த்தால் கலைஞர்களில் ரவிவர்மா, தியாகராஜா, தாகூர், வாஸ்வானி, சரோஜனி என்ற சிலரை யாங்காங்கு காண்கிறோம். இச் சந்தர்ப்பத்தில் ஓர் விஷயம் குறிப்பிடப்பாலது. அதாவது கலையென்பது சகல நிகழ்ச்சிகளையும் உணர்த்துகிறது. கலையின் வாயிலாகவே ஒருவன் தான் அனுபவித்த உணர்ச்சியை பிறர்க்கு வேண்டு மென்றே தெரியப்படுத்துகிறான். விஞ்ஞானமும் அஃதே. விஞ்ஞான சாஸ்திரிகளிலும் ஸர் J. C. போஸ், ஸர் P.C. ரே, ஸர் C.V. ராமன் என்ற ஒரு சிறுபான்மையோரையும், அரசியல் சாஸ்திரத்தில் மகாத்மா காந்தி, ஜவஹர் போன்றாரையுமே பார்க்கிறோம்.

இங்ஙனம் நம் நாட்டில் கலையும் விஞ்ஞானமும் வளராததற்குக் காரணம் நாடு அரசாங்கத்தார் கையிலும் முதலாளிகளின் கையிலும் அகப்பட்டுக் கொண்டிருப்பதே.

ஒரு தேசம் முன்னேற்றமடைய வேண்டுமானால் அத் தேசத்தில் கலையும், விஞ்ஞானமும் யாண்டும் இடைவிடாது விருத்தி செய்யப்பட வேண்டும். மேலும் பொதுவாக மனித சமூகமே முன்னேற்றமடைவதற்கு உலகத்திலுள்ள ஒவ்வொருவரும் கலை, விஞ்ஞானம் என்னும் இவ்விரண்டைப் பற்றிய அறிவை அடையவேண்டும்.

மகாயுத்தத்தின் பிறகு விஞ்ஞான துறையில் ஏற்பட்ட விருத்தி யெல்லாம் அதைவிட ஒரு பெரிய மகா யுத்தம் மூட்டுவதையே நோக்குகிறது 1920-ம் ஆண்டிலிருந்து ஒவ்வொரு தேசமும் ஆயுதப் பரிகாரணம் என்னும் ஆடைக்குள் புகுந்து கொண்டு விஞ்ஞான புதுமைகளை விருத்தி செய்து கொண்டு வந்திருக்கிறது. அப் புதுமைகளின் நோக்கம் இனி ஏற்படவிருக்கும் போரை மிகவும் பயங்கரமாகச் செய்வதே. ஆனால் இந்தியர்கள் அயல் நாட்டினருக்கு அடிமைகளாகவும் தாழ்ந்தவர்களாகவும் இருப்பதால் அத் தகைய வேலையில் ஈடுபட முடியவில்லை. ஆகவே இந்தியா இதர தேசங்களோடு ஒரு நிலையில் வைத்துக் கருதப்படுவதற்கில்லை.

இந்தியா தேசம் ஒரு சுதந்திர நாடாகவானால் அது உலக சமாதானத்திற்கே ஒரு பெரிய அனுகூலமாயிருக்கும். மேலும் இதனால் எல்லா நாடுகளிலுமுள்ள விஞ்ஞான சாஸ்திரிகளும் புது மாதிரியில் உழைக்கவும் செய்வர்.

நமது இந்தியா ஒரு பெரிய நாடு. கலையையும் விஞ்ஞான சாஸ்திரத்தையும் விருத்தி செய்வதற்கு வேண்டிய பொருள் ஏராளமாயிருக்கிறது ஆகவே நாம் சிறந்த கலைஞர்களையும் விஞ்ஞான சாஸ்திரிகளையும் உற்பத்தி செய்யலாம். ஆனால் முக்கியமாக நாம் ஒரு விஷயம் கவனிக்கவேண்டும். ஒருவருக்கு எத் துறையில் இயற்கையில் ஆர்வமும் விருப்பமும் இருக்கிறதென்று கண்டு பிடித்து அத்துறையிலேயே அவரை உழைக்கச் செய்து அடிக்கடி உற்சாகப் படுத்தி வரவேண்டும். மேலும் நாம் விருத்தி செய்யும் எந்தக் கலையும் எந்த விஞ்ஞான சாஸ்திரமும் மனித வாழ்க்கையும் மனித சமூகமும் முன்னேற்ற மடைவதற்கு அநுகூலமாயிருக்க வேண்டும். அதாவது அவைகள் விவசாயம், கைத்தொழில் முதலியவைகளை விருத்தி செய்யக் கூடியவைகளாயிருக்க வேண்டும். இவ்வேலையை இந்திய மக்கள் அடங்கிய இந்திய சர்க்காரே பார்த்து வந்தால் நலம்.

எவ்வளவு இளைஞர்கள் தங்களது மூளையையும் சரீரத்தையும் தாங்களே விருத்தி செய்வதற்கு ஏதுவொன்றுமில்லாமல் இருக்கிறார்கள்! தேகப் பயிற்சி என்பது ஒருகலையுமன்றி ஒரு வித்தையுமாகும். இதற்கும் எதிர்கால தேச மக்களுக்கும் நெருங்கிய சம்பந்தமிருக்கிறது. ஆகவே சுகாதாரம் தேகப் பயிற்சி என்னும் இவ்விரண்டும் எதிர்கால இந்திய சர்க்காரின் வேலையில் முக்கியமான தொன்றாக விருக்கவேண்டும்.

நம்மிடம் போதுமான இலக்கியமிருக்கிறது; ஆனால் நாம் விரும்பும் இலக்கியம் தற்போதுள்ளதினின்றும் முற்றிலும் வேறு. நாட்டிலுள்ள ஒவ்வொருவரும் தங்களது வாழ்க்கையையும் பிறருடைய வாழ்க்கையையும் இனிது நடத்தும் வழியை அறிவிக்கும் புத்தகங்கள் நிரம்பிய ஓர் நிலையத்தை ஏற்படுத்த நமக்கு சௌகரியங்கள் கொடுக்கப்பட வேண்டும்.

இந்தியா சுயேச்சை நாடாக வானதும் கலை, விஞ்ஞானம் முதலிய துறைகளில் மாணிக்கம் போன்ற அநேக நிபுணர்களை ஈன்றெடுக்கு மென்பதில் யாதொரு ஐயமுமில்லை.

---


**ஊழியன் சந்தா.**

| | | |
|---|---|---|
| உள்நாடு வருடச் சந்தா | ரூ | 6-0-0 |
| ,, ஆறு மாதங்கட்கு | ,, | 3-0-0 |
| வெளிநாடு வருடச் சந்தா | ,, | 10-0-0 |
| ,, ஆறு மாதங்கட்கு | ,, | 5-0-0 |

காரியஸ்தர்,
ஊழியன் ஆபிஸ்,
56, தம்புசெட்டித் தெரு,
சென்னை.




## திருவாங்கூர் வகுப்புப் பிரச்சினை

### ஸர் ஸி.பி. ராமசாமி அறிக்கை

ஸர். ஸி. பி. ராமசாமி ஐயர் பின்கண்ட அறிக்கையை வெளியிட்டிருக்கின்றார்:—சென்ற சில மாதங்களாக எனக்கும் தீவான் சர் முகம்மது ஹபிபுல்லாவுக்கு மிடையில் மனஸ்தாபமுண்டாகும்படி செய்யும் நோக்கத்துடன் பல முயற்சிகள் செய்யப்பட்டிருக்கின்றன. நாங்களிருவரும் முரண்பட்ட முறையில் வேலை செய்து வருவதாகத் தோன்றும்படி செய்ய அம்முயற்சிகள் செய்யப்பட்டதாக தோன்றுகின்றது. ஆனால் நாங்களிருவரும் பழைய தோழர்களும் சகாக்களுமாவோம். இதனால் இம் முயற்சிகளை நாங்கள் வேண்டுமென்றே அலக்ஷியம் செய்து வந்திருக்கின்றோம். ஆனால் கோழஞ்சேரியில் சமீபத்தில் கூடிய மகாநாட்டில் 'திருவாங்கூரில் வகுப்புத் தகராறுகளை முடிவுக்குக் கொண்டுவர சர். ஹபிபுல்லா ஆவலுள்ளவராக இருப்பதாகவும் ஆனால் நான் தான் அவருக்குத் தடையாக இருப்பதாகவும் கூறப்பட்டது. இக் கூற்றை கவனியாமலிருப்ப தென்பது முடியாதகாரியமாகும். இக்கூற்று முற்றிலும் ஆதாரமற்றதாகும். மகா ராஜாவுக்கு ஆலோசனை கூறுபவர் என்ற ஹோதாவில் நான் செய்ய வேண்டிய வேலையை சர். முகம்மது ஹபிபுல்லாவின் பூரண ஒத்துழைப்பையும் தீவிரமான உதவியையும் பெற்றுச் செய்து வருகின்றேன். எனக்கும் அவர் கவனிக்கவேண்டிய நிர்வாகப் பிரச்னைகளுக்கும் எவ்வித சம்பந்தமுமில்லை. ஆனால் அவர் திவான் பதவியை ஏற்றுக் கொண்டது முதல் நாங்களிருவரும் ஊழிய வர்க்க சம்பந்தமாகவும் சட்டசபை சம்பந்தமாகவும் வகுப்புப் பிரச்சினையைச் சதா விவாதித்து வந்திருக்கின்றோம். எமக்குள் இப்பிரச்சினையின் முக்கியத்தைப்பற்றியாவது, எல்லா சமூகத்தினரும் தம்முள் பரஸ்பரம் சச்சரவு செய்து கொண்டிருப்பதில் ஊக்கத்தை வீண் செலவிடாமல் சமஸ்தானத்தின் நன்மைக்காகச் சேர்ந்து பாடுபடும்படி செய்யக்கூடிய பரிகாரத்தைக்கூடிய சீக்கிரம் கண்டு பிடிக்க வேண்டிய அவசியத்தைப் பற்றியாவது எங்களுக்குள் ஒருமுறையாவது அபிப்பிராய பேதமேற்பட்டதில்லை.

---

### திருவள்ளுவர் திருநாள்

திருவள்ளுவர் திருநாளை கொண்டாடிய பல அறிஞர்களும் பல சங்கத்தினர்களும் விழாக் கொண்டாடிய முறைகளைப்பற்றி எங்களுக்கு அன்புடன் எழுதியறிவித்தமையைப் பெரிதும் பாராட்டுகின்றோம்.

இன்னும் யார் யார் எவ்வெவ்வூர்களில் எவ்வெச் சங்கங்களின் வழி எப்பெரியார் தலைமையில் எவ்வெவ் வறிஞர்கள் சொற்பொழிவுகளுடன் கொண்டாடினார்கள் என்பதும், வீதி வலம், ஏழைகட்கு உணவு கொடுத்தல், திருக்குறட் பரிசு முதலியவற்றில் என்று நடைபெற்றன என்பதும் எங்களுக்கு உடனே விளக்கமாய் எழுதியனுப்பப் படுமானால் அவற்றை அண்மையில் வெளியிடப் போகும் "திருவள்ளுவர் நினைவு மலரில்" பதிப்பிக்கற்கு உதவியாயிருக்கும் என சென்னைத் திருவள்ளுவர் திருநாட்கழகத்தினர் காரியதரிசி அறிவிக்கிறார்.

### தேவகோட்டை ஹைஸ்கூல் பழைய மாணவர் சங்கம்

ஷை சங்கத்தின் கூட்டம் மேமீ 21-ந் தேதி செவ்வாய்கிழமை காலை ஹைஸ்கூல் கட்டிடத்தில் சரித்திர ஆசிரியர் ஸ்ரீமான் T. S. ராஜகோபாலய்யர் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. சுமார் 30 அங்கத்தினர்கள் ஆஜராகி யிருந்தார்கள். சங்கத்தின் ஆண்டுவிழா ஜூன்மீ 10-ந் தேதிக்குள் நடத்துவதாக தீர்மானம் செய்யப்பட்டது. அதை நிர்வகிக்க 8 அங்கத்தினர்கள் தேர்ந்து எடுக்கப் பட்டனர். எல்லா பழைய மாணவர்களின் பொருளுதவியும், ஒத்துழைப்பும் உதவியும் கோரப்படுகிறது என்று சங்கக் காரியதரிசி K. R. ராமசாமி எழுதுகிறார்.

---

எஜமான்வேலைக்காரனைப் பார்த்து:— அடே, போடா, கழுதை.

வேலைக்காரன்:—எஜமானே, கழுதைக் கொப்பாக வேலை செய்துவிட்டு சாப்பாட்டுக்கு அலைகிறேன். ஆனால் நன்றிகெட்ட பூனையைப்போல் தாங்களிருக்கிறீர்களே என்பதுதான் வருத்தம்.

# விமானத் தபால் விபரம்

### கராச்சி—சென்னைப் பாதை

| | | | |
|---|---|---|---|
| காரச்சியிலிருந்து | புறப்படும் நாள் | வெள்ளி | இங்கள் |
| ஆமதாபாத் | புறப்படும ,, | ,, | ,, |
| பம்பாய் | ,, | ,, | ,, |
| ஹைதராபாத் | வரும் நாள் | ,, | ,, |
| ,, | புறப்படும் | சனிக்கிழமை | செவ்வாய் |
| சென்னை | வரும் நாள் | சனிக்கிழமை | செவ்வாய் |

### சென்னை—கராச்சிப் பாதை

| | | | |
|---|---|---|---|
| சென்னையிலிருந்து | புறப்படும் நாள் | திங்கள் | வெள்ளி |
| ஹைதராபாத் | வரும் நாள் | ,, | ,, |
| ,, | புறப்படும் நாள் | செவ்வாய் | சனி |
| பம்பாய் | ,, | ,, | ,, |
| ஆமதாபாத் | ,, | ,, | ,, |
| காரச்சி | வரும் நாள் | செவ்வாய் | சனி |

### கராச்சி—கல்கத்தா—ரங்கூன்
(டாடா ஏர் சர்வீஸ்)

| | | | |
|---|---|---|---|
| காரச்சியிலிருந்து | புறப்படும் நாள் | வியாழன் | ஞாயிறு |
| ஜோட்பூருக்கு | வரும் நாள் | ,, | ,, |
| ஜோட்பூர் | புறப்படும் நாள் | வெள்ளி | திங்கள் |
| கல்கத்தா | வரும் நாள் | ,, | ,, |
| ,, | புறப்படும் நாள் | சனி | செவ்வாய் |
| ரங்கூன் | வரும் நாள் | ,, | ,, |

### ரங்கூன்—கல்கத்தா—கராச்சி

| | | | |
|---|---|---|---|
| ரங்கூனிலிருந்து | புறப்படும் நாள் | திங்கள் | வெள்ளி |
| கல்கத்தா | வரும் நாள் | ,, | ,, |
| ,, | புறப்படும் நாள் | செவ்வாய் | சனி |
| ஜோட்பூர் | வரும் நாள் | ,, | ,, |
| ,, | புறப்படும் நாள் | புதன் | ஞாயிறு |
| காரச்சி | வரும் நாள் | ,, | ,, |

### கிராய்டன் (லண்டன்) கராச்சி

| | | | |
|---|---|---|---|
| கிராய்டன் | புறப்படும் நாள் | சனி | செவ்வாய் |
| காரச்சி | வரும் நாள் | வியாழன் | ஞாயிறு |

### கராச்சி—கிராய்டன்

| | | | |
|---|---|---|---|
| காரச்சி | புறப்படும் நாள் | புதன் | ஞாயிறு |
| கிராய்டன் | வரும் நாள் | திங்கள் | வெள்ளி |

## கட்டண விகிதம்

### இந்தியாவிலிருந்து

இங்கிலாந்து அல்லது ஐயர்லாந்துக்கு (ஆகாயத் தபாலில்) அனுப்பப்படும் எந்த கடிதங்கட்கும் முதல் ஔன்ஸுக்கு 7½ அணவும் அப்பால் ஒவ்வொரு ஔன்சுக்கும் 7 அணவும் ஸ்டாம்புக் கட்டணம் செலுத்தப்பட வேண்டும்.

டச்சு கிழக்கிந்தியத் தீவுகள், ஆஸ்திரேலியா ஆகிய தேசங்கட்கு அரை ஔன்ஸ் காகிதங்கட்கு முறையே 6 அணு, 8 அணு 6 பைசா தபால் கட்டணமும் சாதாரண தபால் கட்டண விகிதமும் செலுத்த வேண்டும். ரிஜிஸ்தர் கடிதமாக விருந்தால் அதற்கான 3 அணு கட்டணம் தனியாகச் செலுத்தப்பட வேண்டும்.

கார்டுகட்குக் கட்டணம் 4 அணு.

### இந்தியா பர்மாவுக்குள் எந்த இடத்திற்கும் ஆகாயத்தபாலில் கடிதமனுப்ப.

ஒவ்வொரு அரைத் தோலாவுக்கும் 2 அணு. அரைக்கு மேல் ஒரு தோலாவரை இருந்தால் சாதாரணத் தபால் கட்டணமும் 2 அணவும் அதற்குமேற்பட்ட ஒவ்வொரு இரண்டு தோலாவுக்கும் 2 அணவும் சாதாரண தபால் விகிதமும்.

### தபால் நேரம்

பம்பாய், காரச்சி முதலியவிடங்கட்கு சென்னையில் ஆகாயத் தபால் கடிதங்கள் ஜெனரல் போஸ்டாபீஸில் சேர்ப்பிக்கப்பட வேண்டிய கடைசி நேரம்:—

| | | |
|---|---|---|
| திங்கள் | பகல் | 12—15 |
| வெள்ளி | ,, | 12—0 |

ரங்கூன் செல்லும் விமானத் தபால் கடிதங்களை "போஸ்டு" செய்யவேண்டிய கடைசி நேரம்:—

| | | |
|---|---|---|
| புதன் | மாலை | 6—25 |
| சனி | மாலை | 3—0 |



## பால்ய விவாகத் தடை

பால்ய விவாகத் தடை கவர்ண்மெண்டு சட்ட திட்டங்கள் மூலமாக இருந்து வருகிறது யாவருக்கும் தெரிந்த விஷயம். யாருடைய நன்மைக்காக ஏற்பட்டிருக்கிற தென்பதை ஜனங்கள் கவனிக்கிறார்களில்லை. போகட்டும், பக்குவ மறியாத இளம் பெண்களையும் ஆண்களையும் கலியாணம் செய்து வைப்பதில் பெற்றோர்களுக்கு ஏற்பட்ட நலம் என்ன. புருஷனும் பெண்ணும் அடைகிற நன்மை என்ன சுகம் என்ன. மகாத்மா காந்தி தன்னுடைய பால்ய விவாகத்தைப் பற்றி சொல்லியதில். "கோடி வஸ்திரங்களும் நல்ல சாப்பாடுகளும், உறவினர்களோடு கூடிகளிப் படைதலும், மேள தாள வாத்தியங்கள் கேட்பதிலும், ஊர்வலம் முதலிய குஷால்களும் எபபொழுதும் கூட விளையாடுகிறதற்கு ஒரு பெண்ணும் கிடைதத்து என சந்தோஷப் பட்டனே தவிர வேறொன்றும் தெரிந்த பாடில்லை" என்று சொல்லியிருக்கிறார். "சும்மா இருக்கிற சங்கை ஊதிக் கெடுத்தான் பண்டாரம்" என்று சொல்வதுபோல் ஒன்றும் அறியாத சிறு பெண்களையும் ஆண்களையும் பால்யத்திலேயே பெற்றோர்கள் கெடுத்துவிட முயற்சி செய்து வருகிறது அவர்களுடைய ஜாதிக்கட்டுபாடுக்கும் பண்டு தொட்டுள்ள பாரம்பரை பழக்க வழக்கங்களையும் கை விடக்கூடாதென நம்பிக்கை கொண்டிருக்கிறார்களெனத் தெரிகிறது. "தானைப் பழுக்கிற பழம் சுவையா. காயைப் பழுக்க வைத்து சாப்பிடுகிறது சுவையா," ஒவ்வொரு ஆணும் பெண்ணும் தனக்கு தனக்கு உணர்ச்சி வருங் காலத்தில் கலியாணம் செய்து சுபிக்ஷயாக வாழுகிறது உடலுக்கு நலமா. அல்லது உணர்ச்சி வரும்படி தானே உற்பத்தி செய்து அதன் பின் சுக வாழ்வு தேடுவது உடல் நலமா என்பதை வாசகர்களே யூகித்துக்கொள்ள வேண்டியது. போகட்டும் பால்ய விவாகத்தினால் நன்மை ஒன்றுமில்லா விட்டாலும் கெடுதலில்லாமலிருக்கிறதா. திடகாத்திரமாக வாழ முடியுமா தன்னைத்தானே கெடுத்துக் கொள்ளுகிறதற்கு கட்டுப்பாடுகளும் பழக்க வழக்கங்களும் இருந்து வருகிறது என்பதை கவனிப்பாரில்லையா புராதன பழக்க வழக்கங்களென பெற்றோர்கள் தங்களுடைய குழந்தைகளுக்கு பால்ய விவாகம் செய்து வைத்து விட்டால் பின்னால் படுகிற கஷ்ட நஷ்டங்கள் பெற்றோர்களைச் சார்ந்ததல்லவே. கவர்ண்மெண்டார் சட்ட திட்டங்கள் மூலமாக பால்ய விவாக ரத்து செய்தாலும் பிரதேசங்களுக்கு பாத்தியப்பட்ட நாடுகளில் போய் பால்ய விவாகம் செய்ய ஜனங்கள் துணிவு கொள்கிறது. தான் கெட்டுப் போக வீரியம் காண்பிக்கிறதுபோலிருக்கிறது.

---

### தாது வருஷப் பஞ்சம்

ஒவ்வொரு தாது வருஷத்திலும் பஞ்ச மேற்படுமென நம் முன்னோர்கள் சொல்லக் கேள்விப்படுகிறோம். தாது வருஷம் வருகிறதற்கும் நாள் நெருங்கி விட்டது. மழையின்மையும் பனியின் கொடுமையும் அதிகமாக இருக்குமென பெரியோர்கள் சொல்லத்தெரிகிறது. மழைக்கு முன் மேகம் கூடுவதுபோல் பின்னால் வரப் போகும் தாது வருஷப் பஞ்சத்திற்கு அறிகுறியாக பனியும் வெயிலும் இப்போதே அதிகமாக இருந்து வருகிறது ஒவ்வொருவரும் தெரிந்த விஷயம். சில ஊர்களில் தண்ணீர் கஷ்டமிருந்து வருகிற தென்பதையும் ஊழியன் நேயர்கள் அறிவர்.

நம் நாடோ ஏழ்மைப்பட்ட நாடு. வேலையில்லாத் திண்டாட்டமோ அதிகம். பிச்சைக்காரர்களோ நாளுக்கு நாள் பெருகிக் கொண்டு வருகிறார்கள்.

பணக் கஷ்டத்திலிருந்து நீக்குவதற்கு ஏழை எழிய ஜனங்களுக்கு இடவசதியும் குடி தண்ணீர் முதலியவைகளுக்கு கஷ்டமில்லாமல் பாதுகாக்க வேண்டியவைகளுக்கும் மற்றும் அப்போதைக்கப்போது நடக்கிற மற்றய பஞ்சத்தின் நிவாரணைக்கும் கவர்ண்மெண்டாரும் காங்கிரஸ்காரர்களும் தனவான்களும் வேண்டிய சிரத்தை எடுத்து பஞ்ச நிவாரணை செய்ய வேண்டுமாய் கேட்டுக் கொள்ளப்படுகிறது.

---

ஒரு ஆங்கிலர்:—இந்தியனைப் பார்த்து மிஸ்டர்! மேல்நாடுகளெல்லாம் ஆகாயக் கப்பல் மூலமாக உயரப் பறக்குதே. இந்நாட்டில் நீங்கள் ஒரு முயற்சியும் செய்வதாகக் காணோமே.

இந்தியன்:—மிஸ்டர் (ஆங்கிலரை) எவ்வளவு உயரே பார்தாலும் ரொட்டித் துண்டுக்கு கீழேதான் வரவேணும் தெரியுமா உங்களுக்கு.

• • •

# "காங்கிரஸ், உத்தியோகத்தை ஏற்கலாகாது"

## "பிரிட்டன் சம்பந்தப்படுகிற யுத்தத்திற்கு இந்தியா ஒத்துழைப்பதில்லை"

## பொன்னானி தாலுகா காங்கிரஸ் மகாநாடு

பொன்னானித் தாலுகா அரசியல் கூட்டம் குருவாயூர் கேலப்ப மந்திரத்தில் மே மாதம் 21-ந் தேதி சுதேசிய மகா ஜனக்கூட்டம் மிஸ்டர் A. K. பிள்ளையின் தலைமையின்கீழ் நடைபெற்றது. காங்கிரஸ் முழுவேலைகளையும் காந்திஜியினுடை அற்புத திறமைகளையும் தலைவர் எடுத்துப் பேசினார். காங்கிரஸின் கண்ணியமும் பெருக்கமும் பேசப்பட்டது. காங்கிரஸ் எதற்காக பாடுபடுகிறது என்ற உண்மை விளக்கப்பட்டது. சுயாராஜ்யம் இன்ன கொள்கையுடையது என்பதும் விவசாயிகளுக்கும் மற்றுமுள்ளவர்களுக்கும் ஏற்படக் கூடிய நன்மையையும் எடுத்துக் கூறப்பட்டன. இளவாசர்களுக்கும் நிலச் சுவான்தார்களுக்கும் மனதில் குழப்ப மேற்பட்டிருக்கிறது. பெடால் குறிப்பானது அபிவிர்த்தியையும், சிக்கனத்தையும் ஜனங்களுடைய சுதேசியத்தையும் தடங்கல் பண்ணக்கூடியதாயிருக்கிறதென்று தலைவர் குறிப்பிட்டார். உண்மையான சுயாராஜ்யம் பெறவேண்டுமென்றால் தற்சமயம் நடக்கும் கவர்ன்மெண்டு முறைகளை நேட்டிவ் ஸ்டேட்களில் முற்றிலும் நீக்கவேண்டும். காங்கிரஸ் நாள் கடந்த வண்ணமாகவே வேலை செய்கிறது. காங்கிரஸ் சீர்திருத்த கவுன்சில்களுக்குள் நுழையும்படி தீர்மானிக்கவேண்டும். யுத்த சப்தம் கிளம்புகிறது. பிரிட்டனும் உடன்படுமெனத் தெரிகிறது. இந்த யுத்தத்திற்கு இந்தியாவால் ஒருவித உதவியும் ஏற்படக்கூடாதென முறையை தெரிவித்தார்.

### தீர்மானங்கள்

1. மிஸ்டர் T. R. கிருஷ்ணசுவாமி அய்யரின் அகால மரணத்திற்கு மிகுந்த வருத்தத்தைத் தெரிவித்தல்.

2. வங்காளக் கைதிகளை இன்னும் சிறையில் தாமதித்து வைத்தலை ஆட்சேபித்தல்.

3. பிரிட்டன் சம்பந்தப்படுகிற யுத்தத்திற்கு பங்கெடுத்துக் கொள்ளாதிருத்தல்.

4. ஆபீஸை காங்கிரஸ் ஒத்துக் கொள்ளக் கூடாதென்பது.

5. ஜவஹர்லால் நேரு, எம். என். ராய், S. C. போஸ், கான் அப்துல்காபர் கான் முதலியவர்களின் தொடர்ந்து சிறையிருத்தலை ஆட்சேபித்தல்.

6. கிராமக் கைத்தொழில் விஷயமாக ஒரு கமிட்டி நியமித்தல்.

7. ஸ்டேட் குடிகளின் அபிமானங்கள் பிரிட்டிஷ் இந்திய குடிகளோடு சேர்ந்துள்ளவைகளா யிருக்கவேண்டும்.

8. கோளாவிலுள்ள பிரபல்ய காங்கிரஸ்காரர் Mr. கொவ்காட்டி ராமன் மேனன் என்பவர் சண்டையில் பங்கெடுத்துக் கொள்ளாதிருத்தல் விஷயம் எதிர்ப்பு செய்ய விரும்பினார். அப்பொழுது தெரிந்தெடுக்கப்பட்ட ஒருவால்ல என்று குறிப்பிட்டார். அதைக் கேட்டவுடன் ராமன் மேனன் வெளியே போய்விட்டார். போகும் பொழுது இந்தக் கூட்டம் சரியான முறையில் நியமம் செய்யப்படவில்லையென்றும், காங்கிரஸின் புதிய நியமுக விதிகளுக்கு சரியாயில்லை யென்றும் சொன்னார் பின் மேல்கண்ட தீர்மானங்கள் ஏகமனதாக தீர்மானமாயிற்று.

### பெண்கள் கூட்டம்

பொன்னானித் தாலுகா கூட்டத்தை ஒட்டி, பெண்கள் கூட்டமொன்று ஸ்ரீமதி மட்டில்டான கல்லான் தலைமையின் கீழ் நடைபெற்றது. ராஜிய விஷயத்தில் பெண்களுக்காக உழைக்கிறதாகவும் அவளுடைய சகோதரிகளை தாய் நாட்டின் முன்னேற்றத்திற்கு பாடுபட ஏற்பாடு செய்திருக்கிறதாகவும் தலைவர் பேச்சில் குறிப்பிட்டிருக்கிறார்.

---

## சத்தியமூர்த்தியின் வேண்டுகோள்

---

மதராஸ் ஜில்லா காங்கிரஸ் கமிட்டி தலைவர் ஸ்ரீமான் S. சத்தியமூர்த்தி யவர்கள் மதராஸ் ஜனங்களுக்கு தெரி விப்பதாவது:—

ஆண்களும் பெண்களுமாக 2000 பேர்கள் மதராஸ் இந்தியன் நேஷனல் காங்கிரசுக்கு மெம்பராக சேர்ந்திருக்கிறார்கள். ஜூன் மாதம் 14௳ க்குள்ளாக 5000 மெம்பர்கள் சேர்க்கப்பட வேண்டும். அவ்வித 5000 மெம்பர்களுக்குள் தான் வருஷாந்திரக் காங்கிரஸிற்கு 10 மெம்பர்களுக்கு மேல் போராமல் தெரிந்தெடுக்கப் படுவார்கள். அடுத்த வரும் 3 வாரத்திற்குள்ளாக 3000 மெம்பர்கள் சேர்க்க வேண்டியதற்கு மதராஸ் வாசிகள் ஒவ்வொருவரும் மெம்பராகச் சேரும்படியும் மெம்பர்கள் சேர்க்கும்படிக்கும் கேட்டுக் கொள்ளப்படுகிறது. இதை ஒரு முக்கியமாகவும் அத்தியாவசியமான காரியமாகவும் ஒவ்வொருவரும் கருதவேண்டும்.

---



### அய்மென்
### ஷண்முகானந்த சங்கம்

இச்சங்கத்தின் ஏழாவதாண்டு ஆருவது மாதக் கூட்டம் சென்ற சித்திரைத் திங்கள் 30-ம் நாள் இரவு 9 மணிக்கு மேல் உயர்திரு. அரு. ராம. அருணாசலம் தலைமையின் கீழ் நடைபெற்றது. அஞ் ஞான்று கடவுள் வணக்கம் பாடப்பட்டதும் திருவாளர்களான, சுப. ஆறுமுகன் "கல்வி" என்பதுபற்றியும், கா. மாயாண்டி "அன்பு" என்பது பற்றியும் சி. மாணிக்கவாசகன் "இளமை" என்பது பற்றியும், கா. சின்னக் கருப்பன் "நமது கடமை" என்பதுபற்றியும் பெரி. நாராயணன், "சிநேகம்" என்பதுபற்றி நீண்ட நேரம் அழகாகப் பேசினார்கள். பின் தலைவாவர்கள் ஒவ்வொன்றுக்கும் தக்க சான்றுகளுடன் முடிவுரை கூறியதும் இளைஞர்களால் மங்கள கீதம் பாடப்பட்டு இரவு 11 மணிக்கு சபை இனிது நிறைவெய்தியதென ஸ்ரீஷண்முகதாச னறிவிக்கிறார்.

### அய்மென்
### பூமி வெடிப்பு

யுவ ஆண்டு வைகாசித் திங்கள் 3-ம் நாள் பிற்பகல் இரண்டு மணிக்குமேல் வருணபகவான் தன்னுடைய முழுப் பலத்தையும் செலுத்த ஆரம்பித்துவிட்டான். சுமார் இரண்டு மணி நேரம் மழைபொழிந்து கொண்டிருந்தது. இங்குள்ள சினிமாக் கொட்டகைக்கு எதிரிலும் சுற்றுப்புறங்களிலும் பூமி வெடித்து தண்ணீர் கீழிருந்து பொங்கிக்கொண்டு மேலே வந்திருக்கிறது. இவ்வதிசயத்தை ஏராளமான ஜனங்கள் வந்து பார்வையிட்டுச் செல்லுகின்றனர். ஆனால் சேதம் ஒன்றும் ஏற்படவில்லை என ராம. அருணாசலம் எழுதுகிறார்.

### பாகனேரியில் கும்பாபிஷேகம்

இராமனாதபுரம் ஜில்லா சிவகெங்கைத் தாலுகாவைச் சேர்ந்த பாகனேரியில் ஸ்ரீ வெண்ணெயுண்ட பெருமாளுக்கு வருகிற வைகாசிமீ 23-ந் தேதி காலை மணிக்குமேல் 6–30 மணிக்குள் அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகம் நடைபெறும்.

அவ்வமயம் (செம்பொன்னார் கோவில் ராமசாமி மக்கள்) கோவிந்தசாமி பிள்ளை, தெக்ஷிணாமூர்த்தி பிள்ளை சிதம்பரம் வைத்தியநாதம் பிள்ளை இவர்களின் மேளக்கச்சேரிகளும், காஞ்சிபுரம் பட்டம்மாள் பாட்டுக் கச்சேரியும் சதுர்க்கச்சேரியும் இரவில் சுவாமி புறப்படும் வான வேடிக்கைகளும் நடைபெறும் என்று தனவைசிய இளைஞர் தமிழ்ச் சங்கம் உபகாரியதரிசி வே. மாணிக்கம் அறிவிக்கிறார்.

### சிறுகூடற்பட்டி
### பாரதமாதா வாசகசாலை

---

### திருவள்ளுவர் திருநாட் கோண்டாட்டம்

---

இவ் வாசகசாலையின் சார்பாக 18-5-35-ந் தேதி மாலை 5 மணிக்கு இவ்வூர் கலைமகள் வித்தியாசாலை தலைமை யாசிரியர் திருவாளர் N. S. சாம்பசிவ ஐயரவர்கள் தலைமையில் "திருவள்ளுவர் பிறந்ததின விழா" ஆரம்பமாயிற்று. உள்ளூர்ப் பள்ளி மாணவி மாணவர்களும் மற்றும் பலரும் விழாவில் கலந்து கொண்டார்கள்.

அவ்வமயம் திரு. P. M. திருப்பதி B. A. வகுப்பு மாணவர் அவர்கள் 'திருவள்ளுவரின் பிறப்பின் தூய்மை' என்பதுபற்றி, அவர் உயர் குடியிற் பிறந்தவர் என்பதற்குத் தக்க ஆதாரங்கள் எடுத்துக் காட்டி மிக இனிமையாகப் பேசினார்.

இரண்டாவதாக திரு. S. S. வினைதீர்த்தான் அவர்கள் 'திருவள்ளுவர் இல்வாழ்வு, திருக்குறள்' என்பதுபற்றி மிக அழகாக உபந்நியசித்தார்.

மூன்றாவதாக திரு. A. L. நாராயணன் Intermediate மாணவர் அவர்கள் கம்பரும் திருவள்ளுவரும் தமிழுக்குக் 'கதி' ஆவார்கள் என்பதை மிக்க என்பதை மிக்க அழகாக எடுத்துக் காட்டி விரிவாகப் பேசினார்.

தலைவர் முடிவுரையாகச் சில குறிப்புக்களைக் கூறியபின்னர் தலைவர்க்கும் பேச்சாளர்க்கும் கூட்டத்தினர்க்கும் காரியதரிசி வந்தனங்கூற சபை 6-30 மணிக்குக் கலைந்தது என S. S. V. அறிவிக்கிறார்.

---

## ரயில் போக்கு வரவு

---

### மதராஸ்-எழும்பூர்

#### மெயின் லைன்.

| வண்டிப் பெயர் | புறப்படும் நேரம் | வரும் நேரம் |
|---|---|---|
| இண்டோ ஸிலோன் எக்ஸ்பிரஸ் .... | மாலை 9 0 | காலை 6 40 |
| செங்கோட்டை பாஸஞ்சர் .... | காலை 7 30 | மாலை 7 15 |
| கூடலூர் பாஸஞ்சர் .... | மாலை 4 15 | காலை 11 30 |
| திருவனந்தபுரம் பாஸ்டு பாஸஞ்சர் .... | மாலை 9 30 | காலை 6 5 |
| திருச்சி பார்சல் .... | மாலை 10 20 | காலை 5 35 |

#### கார்டு லைன்.

| வண்டிப் பெயர் | புறப்படும் நேரம் | வரும் நேரம் |
|---|---|---|
| தனுஷ்கோடி பாஸ்டு பாசஞ்சர் .... | காலை 11 30 | மாலை 2 40 |
| திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ் .... | மாலை 8 00 | காலை 7 15 |

### மதராஸ்—செண்ட்ரல்.

| வண்டிப் பெயர் | புறப்படும் நேரம் | வரும் நேரம் |
|---|---|---|
| கல்கத்தா மெயில் .... | மாலை 8 30 | காலை 8 35 |
| கிராண்டு டிரங்க் எக்ஸ்பிரஸ் .... | காலை 8 40 | மாலை 4 35 |
| பம்பாய் மெயில் .... | மாலை 8 40 | காலை 5 55 |
| பம்பாய் எக்ஸ்பிரஸ் .... | காலை 8 30 | மாலை 5 0 |
| பங்களூர் மெயில் .... | மாலை 9 30 | காலை 6 15 |
| ,, எக்ஸ்பிரஸ் .... | மாலை 1 0 | மாலை 2 10 |
| ,, பாஸஞ்சர் .... | காலை 6 15 | மாலை 7 40 |
| ,, ,, .... | மாலை 9 40 | காலை 5 30 |
| ஜோலார்ப்பேட்டை பாஸஞ்சர் .... | மாலை 12 45 | மாலை 2 0 |
| அரக்கோணம் பாஸஞ்சர் .... | மாலை 5 30 | — |
| ,, .... | 6 30 | — |
| மலபார் எக்ஸ்பிரஸ் .... | 8 5 | காலை 7 15 |
| ப்ளுமௌண்டன் எக்ஸ்பிரஸ் .... | 9 15 | 6 32 |

# காலனின் வாழ்வு

நாகரிக மண்டலத்தில் நவ நாகரிக பெண்மணிகளில் ஒருத்தியாகிய கோகிலம் என்பவள் தன்னுடைய தயாராகிய ஆதியாளை அழைத்து "அம்மா! என்னுடைய தமயனுர்களோ உயர்தரக் கல்வி கற்றிருக்கிருர்கள். தகப்பனுரோ ஆயுள்காலமெல்லாம் கவர்ன்மெண்டுக்கு உழைத்து பென்ஷன் வாங்கி சுகஜீவியாயிருக்க திரேக சக்தியில்லாமல் மாண்டுவிட்டார். தினசரி நம் குடும்பத்திற்கு சாதாரணமாக ஆகாரத்திற்கு மட்டும் ரூ 2/ செலவிற்கு வேண்டியதிருக்கிறது. காலம் விதியை நோந்து அடிமைப்பட்ட காலமாக இருக்கிறது. கவனிப்பாருமில்லை. வேறு ஆதரவுமில்லை. தகப்பனுர் சம்பாத்தியத்தில் கடனில்லாமல் விட்டுவிட்டுப் போனது நம்முடைய பாக்கியம் தான். இனிமேல் எப்படிக் காலத்தைத் தள்ளுவது என்பதுதான் மிகுந்த கவலைக்கிடமாகிறது. அண்ணு B. A. முடிய வாசித்து தற்கால ஆயுள் நிர்ணயத்திற்கு பாதியை பிடிப்பிலே கழித்து சரியான பருவமான வாலிபத்தில் சம்பாத்தியம் செய்து சுக ஜீவியாயிருக்க முடியாமல் முன் படிப்புக்கு 15 வருஷ காலமாக செலவு செய்ததைவிட வேலைப் பிரயத்தனத்திற்கும் அப்ளிக்கேஷன் பேப்பர் காகிதத்திற்கும் போக்குவாத்து வண்டிச் செலவுக்கும் தபால் ஸ்டாம்புச் செலவிற்கும் என்னுடைய நகைகளையும் விற்றுக் கொடுத்து இன்னும் பலன் ஒன்றையும் காணுமே. போகட்டும். பணத்தைத் தான்; செலவு செய்தோம். படிப்பிற்கும் பட்டத்திற்கும் தான் மரியாதை இருக்கிறதா? கம்பெனிகளிலோ கவர்ண்மெண்டிலோ ஒரு வேலை காலியிருந்து அந்த வேலைக்கு அவரைப் போய் பார்க்க வேண்டுமென்றுல் அவருக்கு நெருங்கிய பந்துக்கள் மூலமாகவோ சிநேகிதர் மூலமாகவோ பார்க்க வேண்டிய திருக்கிறது. அப்படிப்பட்ட பந்துவோ சிநேகிதரோ படிப்பு வாசனையில்லாத வாகவு மிருக்கலாம். அவரைப் பார்த்து சிபார்சு செய்ய ஒத்துக்கொள்ளுகிறதற்குள்ளாக அப்பா போதும் போதும் என்று சலித்துப் போகிறது. கடைசியிலும் அவர் ஒரு லட்டர் தான் தருவேன் என சம்மதித்து லட்டரில் இது காகிதம் கொண்டு வருகிற இன்னுர் எனக்கு தெரிந்தவர். இன்ன கிளாஸ்வரைக்கு வாசித்து இருக்கிருர். தங்களுக்கு திருப்தியானுல் வேலை போட்டு கொடுக்க வேண்டியது. என் மகன் இன்னுருக்கு வேலை விஷயமாய் சொல்லியிருந்தேன். ஞாபகமிருக்கட்டும் என்று அவருடைய மகனுடைய ஞாபகத்திற்காகவும் இவருக்கு சிபார்சு காகிதமாக கொடுத்து விடுகிருர். சவரம் செய்து வெளுப்பு டிரஸ் போட்டு சிபார்சுக் காகிதத்தை எடுத்து சேபில் வைத்துக்கொண்டு டிராமிலோ வண்டியிலோ முடியுமானுல் நடந்தோ போய் வாசல் காவற்காரனிடம் அவருடைய எஜமான் எங்கிருக்கிருர் என்பதை விசாரிக்க பெற்ருேர்களையும் எஜமான்களையும்விட அவரிடம் மிகுந்த மரியாதை காட்டி பதில் வாங்க வேண்டியதிருக்கிறது. அதிலும் சிலபேர் இப்போது பார்க்க சவுகரியமில்லை அல்லது வேலை காலிக் கிடையாது என்று பதில் சொல்லி அனுப்பிவிடுவர். அதா மீறி அவரைப் பார்க்க அனுமதி வேணுமென்றுல் சாயங்காலம் வாரும் அல்லது நாளைவாரும் என்று பதில் சொல்லிவிடுவான். இப்படி 2-நாள் காவற்காரனிடம் பல்லெல்லாம் தெரிய காட்டவேண்டிய கலி காலமாயிருக்கிறது. கடைசியாக குறிப்பிட்ட முதலாளியையோ உத்தியோகஸ்தரையோ பார்த்தால் சிபார்சுக் காகிதத்தை கையில் வாங்கிப் பார்த்துக் கொண்டு அப்ளிகோஷனை தபால் பெட்டியில் போட்டுவிடுங்கள்; வேலை காலி வரும்போது உங்களுக்கு தெரிவிக்கிறேன் என்று பதில் சொல்லி அனுப்பிவிடுகிருர். அம்மா இதெல்லாம் கவனிக்கும் பொழுது படிப்புக்குச் செலவாகிய பணத்தை வைத்திருந்தாலும் நமக்கு ஒரு ஆஸ்தியாகவும் படிப்புக்கு வீணுக்கிய வாள்நாளில் ஏதாவது ஒரு தொழில் செய்திருந்தாலும் அல்லது சாதாரண சிறு கடைகளில் வேலை பார்த்து வந்திருந்தாலும் சம்பள மிச்சத்தோடு வியாபார அனுபோகமாகி இப்போது கவலை இல்லாத தகுந்த நிலையில் சந்தோஷகாமாக இருந்திருக்கலாம். அப்பாவோ மகன் கவர்ண்மெண்டு உத்தியோகத்திற்கு வந்து விடுவானென தீர்மானித்து அவருடைய சம்பாத்தியத்தை எல்லாம் மகன் படிப்புக்கே செலவு செய்தார். வருங் காலத்தின் நிலமையை தெரிந்திருந்தாரில்லை. போகட்டும் வேலைதானில்லை. வீட்டில் சும்மா இருந்தால் சோம்பேறித் தனமாகி நேரப்போக்குக்கு வெளியே போய் வருகிற இடங்களில் சோம்பேறிகளுடைய சாவகாசங்களும் ஜாஸ்தியாகி படிக்கிற காலத்தில் முக்கிய படிப்பாக கையாண்டு வந்த சிகரெட்களை கடைகளில் கடன் வாங்கி பணம் கொடுக்க வழியில்லாமல் கடைக்காரனோடு சண்டையிட்டு முன் படிப்புக்குச் செலவாகிய தொகைக்கு நடப்பு வட்டியாக செலுத்தி வரவேண்டியதாகவு மிருக்கிறதை பற்றி நினைக்க மனது ரொம்ப சஞ்சலப் படுவதோடு இப்போதும் ஏராளமான பிள்ளைகள் படிப்பில் பணம் செலவழித்து தமாஷாக இருந்துவிடுகிருர்களே. பின்னுல் இவர்கள் கதி என்ன என்பதை நினைக்க பெற்ருேர்களின் மதியீனத்தை நினைக்கும்படியாயிருக்கிறதே தவிர பிள்ளைகளின் விதியை நோகுவதில் பயனில்லை என நினைக்கும் படியாயிருக்கிறது.

அம்மா! படிக்கக் கூடாதென்பதாக நான் சொல்லவில்லை. அதற்காக புஸ்தகம் படித்து சர்டிபிக்கட் வாங்கி வைத்துக் கொண்டதினுலும் படிப்பல்ல. தொழிற் முயற்சிக்காக உள்ள படிப்பும் படிக்கவேண்டும். உத்தியோகம் செய்யவேண்டும். அடிமைத்தனமாகவே ஆயுள் காலமெல்லாம் வாழவேண்டும். அலாக்காசுக்கு சேவித்தாலும் அரண்மனையில் வேலை செய்யவேண்டும் என்ற முது மொழியை உறுதி கொண்டு படிக்கவும் கூடாது. பாஷையை எழுதப்படிக்க / நன்ருகக் கற்றுக்கொண்டு தொழிலில் முயற்ச்சித்து படித்த படிப்பின் மூலமாக பிறதேச முயற்சிகளைத் தெரிந்து நம் நாடு விருத்தியடையவும் நம் குலம் விருத்தியடையவும் செய்ய பிரயாசைப் படுவதுதான் பெற்ருேர்கள் பிள்ளைகளுக்கு செய்ய வேண்டிய கடமையென அபிப்பிராயப் படுகிறேன்.

மகள் சொல்லைக் கேட்டுக்கொண்டிருந்த தாயார் ஆதியாள் கண்ணே நீ சொல்வது பணக் கஷ்டத்தை உத்தேசித்துச் சொல்லுகிருயே தவிர படிப்பைப் பழித்துப் பேசவில்லை எனத் தெரிகிறது. ஸ்ரீ 100/- ரூ. உன் தமையன் கொண்டு வந்தால் படிப்புக்கு பெருமையும் கண்ணியத்தையும் எடுத்துக் கூறுவாய் போலும். உன் தமையனுக்கோ வயது 25 க்கு மேலாகிவிட்டது, சர்க்கார் வேலைக்கோ இனிப் பிரயாசப்படுவதில் பிரயோஜனமில்லை. கம்பெனிகளிலாவது அல்லது வியாபாரிகளிடமாவது அல்லது உபாத்தியாயர் வேலைக்காவது தான் பிரயாசப்பட வேண்டும்.

சரி அதிருக்கட்டும் இவனுக்கு கலியாணம் செய்ய ஏற்பாடு செய்ய வேண்டும். இவன் வாசித்துக் கொண்டிருக்கும் பொழுது அநேகர்கள் பெண் தருவதாக கட்டாயப் படுத்தினுர்கள். படிப்புக் கெட்டுப் போகுமென பெண் வீட்டுக்காரர்களைப் பார்த்து பின்னுல் தான் கலியாணம் நடத்திக்கொள்ள வேண்டிய திருக்கிறது என்று சொல்லிவிட்டேன். படிப்பைவிட்டு இப்போ ஒரு வருஷம்தான் ஆகிறது. B. L. படிக்கப் போவதாக பேச்சை வெளியே பரப்பி பெண் தேட ஆரம்பித்தால் தகுந்த ஐவேஜோடு பெண் கிடைக்கும். வேலையில்லா திண்டாட்டக் காலத்தில் அப்படியாவது சொத்து கிடைத்தால் அவன் பாடு கவலையில்லை. ஆகையால் காலனைக் கூப்பிட்டு B. L. வாசிக்கப் போவதாக வெளியே சொல்லிக் கொண்டிரு என்று தாயாரும் தங்கையும் சொன்னுர்கள். அம்மா B. L. வாசிக்கப் போவதாகச் சொல்வதைவிட L. T. வாசிக்கப் போவதாகச் சொல்லலாமென நினைக்கிறேன்.

தாயார்:—ஏனப்பா! B. L. வாசிக்கப்போவதாகச் சொன்னுலென்ன. B. L. ஐ விட L. T. யின் மேன்மையென்ன.

காலன்:—அம்மா! B. L. வாசிப்பு வக்கில் உத்தியோகத் திற்குள்ளது L. T. படிப்பு உபாத்தியாயர் வேலைக்குள்ளது. வக்கீல் உத்தியோகத்தில் சில பாதகங்களுக்கு உடன் படவேண்டியதாயிருக்கும். உபாத்தியாயர் வேலையிலோ கஷ்டமில்லை. பாதகங்கள் ஒன்றுமில்லை. ஆனுல் ஜனங்கள் உபாத்தியார் வேலையைவிட வக்கீல் வேலையை மேலாகக் கருதுவார்கள்.

தாயார்:—அப்பா! வக்கீல் வேலையில் பாதகங்களுக்கு உடன் படாமல் முடியாதா?

காலன்:—அம்மா முடியும், வரும்படி சுருக்கமாகக் கிடைக்கும். சில காலங்களில் கிடையாமலும் போய்விடும். சரி. அம்மா அதிருகட்டும் பின்னுல் சாதாரணமாக உனக்கு வக்கீல் வேலையின் பெருமையை எடுத்துச் சொல்லுகிறேன். இப்போ எதற்காக நான் படிக்கப் போவதாக பிரஸ்தாபப் படுத்த வேண்டும்.

தாயார்:—அப்பா உனக்கு கலியாணம் செய்து வைக்கத் தீர்மானிக்கிருேம். பெண் வீட்டுக்காரர்கள் கேட்டால் B. L. படிக்கப் போகிருன் என்று சொல்லுகிறது பொய்யாகப் போய்விடக் கூடாது என்பதற்காக நீ முன் கூட்டி வெளியே பேச்சுவிட்டு விடு என்று சொன்னேம்.

காலன்:—அம்மா என்னுடைய கல்யாண விஷயத்தை நீங்கள் தீர்மானிப்பது இப்போது கஷ்டமாகுமே. கல்யாணத்திற்குள்ள ஒரு திறமையும் நம்மிடம் இல்லையே. நமக்கு உதவி செய்வாருமில்லையே. தற்சமயம் நம் குடும்பம் காலங் கழிக்கிறதே மிகுந்த கஷ்டத்திலிருக்கிருேமே. இவ்வளவு துன்பத்தில் ஒரு நாட்டுப் பெண்ணையும் வீட்டிற்குள் கொண்டு வந்து வைத்து கொண்டு நம்முடைய கஷ்டத்தில் அவளையும் பங்கெடுத்துக் கொள்ள நீங்கள் தீர்மானிப்பது அவ்வளவு பொருத்தமல்ல. கொஞ்சம் பொருங்கள் ஏதாவது ஒரு வேலையிலமர்ந்து கொண்டு கலியாணப் பேச்சை வெளியே விடலாம்.

தாயார்:—அப்பா உனக்கோ இப்போது வயது 26 ஆகிறது. வயது அதிகமாகி விட்டால் பெண் கிடைப்பது கஷ்டம். உனக்கு நல்ல இடத்திலிருந்து சொத்தோடு பெண் தேடுகிறேன். கூடிய சீக்கிரம் கிடைக்கும். நீ வேலை பார்க்க வேணுமென்ருலும் பார்க்கலாம். அல்லது சொத்தை மேல் பார்த்து கிடைக்கும் ஊதியத்தை வைத்து சௌக்கியமாகவு மிருக்கலாம்.

காலன்:—அம்மா கலியாண விஷயத்தைப்பற்றி பேச வேண்டாம். தொழிற் முயற்சிக்கு பொருள்வேண்டும்; அனுபோகம் வேண்டுமே என்று கவலைப்படுகிறேன். அப்பொழுது தங்கை கேட்டுக் கொண்டிருந்து:—

அண்ணு! நான் ஒரு விஷயம் சொல்லுகிறேன் கேளுங்கள். விவசாய தொழிலுக்கு போதிய பணம் நம்மிடமிருக்கிறது. அதில் பாடுபடுவது சாலச் சிறந்ததாகும். பாவமில்லாத தொழில். உழைப்பிற்கு தகுந்த ஊதியம் கிடைக்கும். உலகம் அளிக்கிற வரையிலும் விவசாயத் தொழிலைவிட சாலச் சிறந்தது வேறு ஒரு தொழிலுமில்லை. ஒருவரை எதிர்பார்க்க வேண்டியதுமில்லை. அடிமைப்பட்டு வேலைபார்க்க வேண்டியதுமில்லை.

தாயார்:—மகளே! நீ சொல்லுகிற விவசாயத்தின் பெருமையைச் சொல்ல இயலாது. பெருத்த கண்ணியமுள்ளது. தாழ்த்தப்பட்ட மக்களுடைய கூட்டுறவை தேடித்தான் விவசாயம் நடத்த வேண்டியதிருக்கிறது.

காலன்:—அம்மா நீங்களிரு பேர்கள் சொல்லுகிறதையும் கவனித்துக் கேட்டதில் எனக்கு ஒரு முயற்சி தோன்றுகிறது. நான் படித்துக் கஷ்டப் படுவது போல் எவ்வளவோ பேர்கள் எனக்கு அண்ணைத்தையாகவுமிருப்பார்களென நினைக்கிறேன். காங்கிரஸ் மகாசபை நடந்து வருகிறது உலகமறிந்த விஷயம். தொழிலின் அபிவிருத்திக்கும், விவசாய விருத்திக்கும் தாழ்த்தப்பட்ட மக்களின் கஷ்ட நிவாரணைக்குமாக பிரயாசப்பட்டு வருகிறது. ஆகையால் நானும் அதில் சேர்ந்து தேச நன்மைக்குப் பாடு படலாமென நினைக்கிறேன். வேலையில்லாதார்களாகக் கூடி ஒரு சங்கம் ஏற்படுத்தி கதர் உற்பத்தி செய்யவும், தாழ்த்தப்பட்ட மக்களின் முன்னேற்றத்திற்கு போதிய ஒத்தாசை செய்யவுமாக நினைத்து உழைக்க சித்தமாயிருக்கிறேன். அவ்வித ஒற்றுமைக்கு காங்கிரஸ் தலைவர்களையும் சிநேகிதர்களையும் கண்டு பேசி அதே முயற்சியில் விடாமல் ஈடுபட்டால் பின் பலன் உண்டுமென நினைக்கிறேன். என்னைப் பற்றிய கவலை தங்களிரு பேருக்கும் வேண்டியதில்லை. தாயாரும் தங்கையும் சேர்ந்து, "அப்பா தாய் நாட்டிற்கு உழைக்க நீ முன் வருவது பற்றி எங்களுக்கு சந்தோஷம் அதன் படியே நீயும் தகுந்த பிரயாசையோடு உழைத்து சுயராஜ்யம் பெற்று இந்திய மக்களுக்கு புத்துயிர் பெறும் படி செய்ய வேண்டியது" என்று சொல்லுங்கள்.

---




# "சாரங்கதரா"

(திரு. R. சாமினாதன் எழுதுகிறார்)

நான் சில வாரங்கட்கு முன்பு நவீன சாரங்கதரா வென்ற ஒரு படத்தைப் பற்றி விரிவாக எழுதியிருந்ததை ஊழியன் வாசகர்கள் மறந்திருக்கமாட்டார்கள். இன்று இங்கு 'சாரங்கதரா' வென்ற ஒன்றைப்பற்றி எழுத முற்படுகின்றேன். இவ்விரு படங்களும் சாரங்கதான் என்ற தமிழ் நாடகத்தின் உருவங்கள்தான். முன்னையதில் சில மாறுபாடுகள் செய்யப்பட்டிருப்பதால் நவீன சாரங்கதாராவெனப் படுகின்றது. பின்னையது அப்படியே இருப்பதால் சாரங்கதாராவென வழங்கப்படுகின்றது. இரண்டுக்கும் எங்கெங்க விடங்களில் என்னென்ன வித்தியாசம் என்பதை கதையைக் கூறுமுகத்தான் பழய ஞாபகத்தோடு பொருத்தித் தெரிந்து கொள்ளும்படி வாசகர்களிடம் கேட்டுக் கொள்கிறேன்.

இப்புதிய படம் (சாரங்கதரா) லோடஸ் பிக்சர்ஸ் கம்பனியாரால் பம்பாய் வாடியா மூவிடோனில் தயாரிக்கப்பட்டதாகும். இதில் ஸ்ரீமதி டி. எம். சாரதாம்பாள், திரு. வி. எஸ். ஸ்ரீநிவாசன், திரு. கெ. எஸ். சேது பிள்ளை, ஸ்ரீமதி பி. எஸ். ராஜலக்ஷ்மி முதலியோர் நடிக்கின்றனர்.

படம் குறைகூறக் கூடிய நிலைமையில்லை. 'போடோகிராபி' புகழக்கூடியதே. டோனி ரிக்கார்டும் மெச்சத் தகுந்ததுதான். சீன் வகைகளும் நேர்த்தியாக விருக்கின்றன.

கதை பெரும்பான்மையும் தமிழ் நாடறிந்தது. அதன் முழுவிவரமாவது:-

ஹஸ்தினாபுரத்து மன்னன் நரேந்திரன் தன் மகன் சாரங்கதானுக்கு விவாகம் செய்ய நிச்சயித்திருந்த அரசிளங்குமரி சித்திராங்கிமீது மோகம் கொண்டு தானே அவளை மணந்து கொள்ள தீர்மானிக்கிறான். அத்தீர்மானத்திற்கு புரோகிதனாகிய சோமதத்தன் உடந்தையாக விருந்து சாரங்கதானுடைய படத்தைக் காண்பித்து சித்ராங்கி பால் காதலை எழுப்பி நரேந்திரன் கட்கத்திற்கு மாலை சூட்டும்படி ஏற்பாடு செய்கிறான். அவள் முதலில் மறுத்தாலும் அப்பால் ஒத்துக் கொண்டு மாலை சூட்டி ஹஸ்தினாபுரத்திற்கு வருகிறாள்.

நரேந்திரன் தன் பதியில் அரசிளம் குமரியைக் கண்டு அளவிலா ஆநந்தம் கொள்கின்றான்.

ஒரு நாள் சித்திராங்கி தம் புதிய நந்தவனத்தில் உலாவிக் கொண்டிருக்கையில், சாரங்கதானைக் கண்ணுற்று, காதல் மீறி விரகதாபமடைகின்றாள்.

இதற்குள்ளாக ஹஸ்தினாபுரி பட்டமஹிஷி ரத்தினாங்கிக்கு தன் கணவன் நரேந்திரனின் தீய எண்ணம் தெரிந்து விடுகின்றது. தன்னோடு இன்னொருத்தி சிங்காதனத்துக் குரியவளாகப்போகின்றாளென்று அறிய மனம் பொறுக்கின்றாளில்லை. அவள் தன் தோழி யொருத்தியை சித்திராங்கி அரண்மனைக் கனுப்பி காரியம் யாதென்று விசாரிக்கிறாள். ஆதலால் சித்திராங்கி நரேந்திரன் சூழ்ச்சியை அறிந்துகொள்ள இடமேற்படுகின்றது.

இந்த நிலைமையில் ஒரு நாள் நரேந்திரன் சித்திராங்கியை அடைந்து தன் அபிலாஷையை முற்றுவிக்க நரேந்திரனுடன் சென்ற புரோகிதனும் போதிய அளவு துணைபுரிகின்றான். சித்திராங்கிக்கு கிழவனொருவன் தன்னை நாடுவதைப் பார்த்ததும் கோபம் பொங்கி அதிகரிக்கின்றது. ஆனால் தப்ப வழியில்லை. ஆதலால் காதல் காண்பிப்பது போல் பாசாங்கு செய்து கிழவனை ஏமாற்றுகிறாள்.

அந்த வேளையில் நரேந்திரன் வேட்டைக்குச் செல்லவேண்டிய அவசியமேற்படுகிறது. எனவே தன் இளங்காதலியிடம் விடைபெறுகின்றான். அவளும் பாசாங்கில் காதலி போல் கிழக் காதலனுக்கு விடை கொடுத்து அனுப்பி விடுகிறாள்.

சில தினங்களானதும், சாரங்கதானும் தோழர்கள் சிலரும் பொழுது போக்குக்காக புறா பறக்க விடுகின்றனர். 'நல்ல வேளையாக' சாரங்கதானின் புறா சித்திராங்கி அரண்மனையைப் பார்த்து வந்து விழுந்து விடுகிறது. அதனை யொரு வேலைக்காரன் சென்று கேட்



கின்றான். சித்திராங்கியின் தோழி கொடுக்கின்றாளில்லை. ஆதலால் சாரங்கதரனே சென்று தம் சிற்றன்னையிடம் புறாவைக் கேட்க வேண்டிய நிலைமை ஏற்படுகின்றது. அந்த நிலைமையை மிகுந்த மனக்களிப்போடு எதிர்பார்க்கின்றாள் அழகுப் போடகமாகிய காதல் சித்திராங்கி!

சாரங்கதரன் சித்திராங்கி அரண்மனையை நாடியதும் நெடுநாள் தவித்திருந்த சித்திராங்கி இளங்காதலனை தனிமையில் சென்று காதல் பார்வை, காதல் நடை, காதல் புன்னகை, காதல் உள்ளம் காதல் வேட்கை காண்பித்து சந்தனம், களபம் முதலியன பூசி, காம வார்த்தைகள் பலப்பல பேசி, காதலை மூட்ட முயல்கின்றாள். கண்ணாடியில் தன்னுடையவும் சாரங்கதானுடையவும் நிழலைத் தெரியவைத்து மன்மதன் ரதிக்கு ஒப்பாக இசைத்துக் கூறுகின்றாள். பன்முறை கையைப் பிடித்து சுற்றி, அங்குமிங்கும் அழைத்து குதுகல முண்டுபண்ணப் பார்க்கின்றாள். என்ன செய்தும் சாரங்கதான் சிற்றன்னை யென்ற உணர்ச்சியை மறக்கின்றானில்லை. கடைசியில் அவளது ஆசை தெரிந்து வெகுண்டெழுகின்றான். அப்பொழுது சித்திராங்கியோ நரேந்திரனின் சூழ்ச்சியை பட்டவர்த்தனமாக எடுத்துக் கூறி, தன் காதல் முறையிட்டு, அவனை எவ்வழியிலும் விடுவதில்லை யென்று கைப் பற்றுகின்றாள். சாரங்கதான் இறுதியாக அவள் பிணிப்பை விட்டு விட்டு தன் அங்க வஸ்திரத்தின் ஒரு பகுதியையும் வெட்டி விட்டு, புறாவுடன் ஓடி விடுகின்றான்.

ஓடுகையில் 'தீவினையால்' புரோகிதன் எதிர்ப்பட அவனுக்கு சாரங்கதரனின் களப கஸ்தூரி அணிந்த தோற்றம் சந்தேகத்தை உண்டு பண்ணுகிறது.

சிறிது பொறுத்து நரேந்திரன் வேட்டையிலிருந்து மீண்டு சித்ராங்கி அரண்மனை புகுகின்றான். அங்கு காயங்களுடன் அலங்கோலமாய்க் கிடக்கும் சித்திராங்கியைக் கண்டு கலங்குகின்றான். அவள் சாரங்கதான் பலாத்காரமாக தன்னைக் கற்பழித்து விட்டதாகக் கூறுகிறாள்.

உடன் சினமுண்டு நரேந்திரன் தன் புதல்வனின் ஒரு காலையும் கையையும் வெட்டி விடுமாறு உத்தரவு கொடுக்கின்றான்.

வேலைக்காரர்கள் அவ்வாறே செய்ய முயலுகையில் சித்திராங்கி குதிரை மீதிவர்ந்து சென்று, தான் கொலை நிகழும் என்ற எண்ணத்துடன் யாதும் சொல்லவில்லையென்றும், தன்னை மன்னிக்க வேண்டுமென்றும், தான் தவறாகக் கூறினால் நரேந்திரன் புதல்வனுக்கே மணம் செய்து விடுவானென்று எதிர் பார்த்ததாகவும் சொன்



சென்னையில் அதிசீக்கிரத்தில் வெளியாகப் போகும் அசன்தாஸ் கிளாஸிகல் டாக்கி நந்தனாரில் வேதியராக நடிக்கும் மகாராஜபுரம் சங்கீத வித்வான் திரு. விஸ்வநாத ஐயர். மேற்படி படத்திற்கு 3 லட்சம் செலவாகி இருக்கிறது

னாள். சாரங்கதான் 'தன் சிற்றன்னையை' மன்னித்தான்.

அதன் மேல் அவன் ஒரு கால் ஒரு கை வெட்டப்பட்டன.

சிறிது பொறுத்து அவ்வழியே வந்த சந்நியாசிக் கூட்டம் கொலையைக்கண்டு இரங்கி சாரங்கதான் உயிர் பெற்றெழுமாறு வரம் கொடுக்கின்றது. சாரங்கதானும் எழுகின்றான்; உடன் அவன் கடவுள் பஜனையின் மாட்சி தெரிந்த சந்நியாசி கூட்டத்தோடு சேர்கின்றான்.

நகர்ப்புறத்து இத்தனையும் நிகழ அரண்மனையில் சித்திராங்கி தன் காதலன் கொலையுண்ட பின் தான் வாழ வேண்டாமென்று துணிந்த உண்மை நிகழ்ச்சியை ஒரு கடிதத்திலெழுதி வைத்துவிட்டு தன்னைக் குத்திக்கொள்கிறாள்.

சிறிது பொறுத்து அங்கு வந்த நரேந்திரன் கொலையுண்ட சித்திராங்கியையும் கடிதத்தையும் கண்டு உண்மை தெரிந்து தன் புதல்வனைத் தேடி யலைகின்றான்.

சாரங்கதான் தான் நாட்டை விரும்பவில்லை யென்றும், ஆண்டான் பாதமே அழகு என்றும், கூற அரசன் தன் முடியை வேறொரு வாலிபனுக்கு அளித்து விட்டு மகனுடன் சந்நியாசம் பூணுகின்றான்.

இக்கதைக்கும் நவீன சாரங்கதராவுக்கும் மிகப் பெரிய வித்தியாசமுண்டு. தயவு செய்து வாசகர்கள் ஊழியன் 46-வது இதழைப் படிக்கும்படிக் கேட்டுக் கொள்கிறேன்.

### நடிகர்கள்.

#### திருமிகு டி. எம். சாரதாம்பாள்

ஸ்ரீமதி சாரதாம்பாள் தமிழ் நாட்டு நாடக மேடையில் நன்கு தெரிந்தவர் என்பதில் ஆட்சேபமிருக்க முடியாது. கிராமபோனிலும் பெயர் எடுத்து இருக்கிறார். ட்ரியோ டேயன்னா பாட்டுப் பாடியவர் என்றால் பாமரர்கள் நன்கறிவர். இவர் முதன் முதலாக சினிமாவில் சாரங்கதராவில்தான் நடிக்கின்றாரென்று நினைக்கிறேன். நடிப்பு கூடியவரையிலும் பாவமில்லை. பொதுவாக Pro-

fessional நடிகர்கள் சினிமாவில் வரும்போது நாடகமேடை நினைவைப் பெற்று விடுவது இவரையும் விடவில்லை. சினிமா நடிப்புக்கும் நாடகமேடை நடிப் புக்கும் வித்தியாசமுண்டு என்பதை இவர் தெரிந்துகொண்டால் அடுத்த படங்கள் மிகவும் வெற்றியடையலாம். காமிரா ஒன்று தம்மைப் படம் பிடிக் கின்றதென்பதை நடிப்பின்போது மறந் திருப்பது நலமென்று இவருக்குக் கூற விரும்புகிறேன். இவரது தோழியாக வரும் ஸ்ரீமதி ராஜலக்ஷ்மி யாரோ சொல்வதைக் கேட்டுக் கேட்டு நகைப் பது படத்தில் மிக நன்றாகத் தெரி கிறது. இது போன்றவை ஒழிக்கப் படவேண்டுமென்று சொல்ல விரும்பு கிறேன்.

ஸ்ரீமதி சாரதாம்பாளின் நடிப்பின் உச்சஸ்தானம் சாரங்கதானிடம் காதல் எழுப்ப முயலும் சீனாகும். உண்மையில் அந்தக் காட்சியே நாடகத்திலும் முக் கியமானது. அதில் கூடிய வரையி லும் நன்றாக நடிக்கிறார். சில இடங் களில் 'மட்டி, சாரங்கதான் இவ்வளவு செய்தும் மண் போலிருக்கின்றானே; பேடியோ அவன்' என்று சொல்லத் தோன்றிவிடுகிறது. அந்த சீனைப் பார்த் தால் சாரதாம்பாள் பொதுவாக சிருங் காரத்திற்காகவே பிறந்தவர் என்று சொல்லாமலிருக்க முடியாது.

அதுபோலவே தற்கொலை காட்சி யிலும் நன்கு நடிக்கிறார்.

கிழக் காதலனுடன் பேசும்போது பாசாங்குக் காதல் காண்பிப்பதாகக் கதை. ஆனால் பேசும் பேச்சு வெளிப் படையாக 'உன்னை விரும்பவில்லை' யென்று சொல்வதுபோல் இருக்கிறது. பொதுவாக இரு பொருள் கொள்ளும் சொற்கள் அந்த விடத்தில் நிரம்பியிருந் தால் நலம். அப்படியில்லை யென்பது நாடகம் எழுதியவர் குறையேயன்றி ஸ்ரீமதி சாரதாம்பாள் குற்றமல்ல. மேலும் நாடகக்காரர் எதுகை மோனை களை வசனத்தில் அளவுக்கு மீறி சந் தர்ப்ப மறியாது போட்டிருக்கின்றார். கோபப்படும் போதும் அழும்போதும் சந்தங்கள் காட்டுவது இயல்பா; அழகா?

பாட்டு விஷயத்தில் ஸ்ரீ சாரதாம் பாளைப் பற்றிக் கூற வேண்டுவதில்லை. பாட்டுப் போட்டுக் கொடுத்தவர் ட்ரியோ டேயன்னா மெட்டு, எங்கள் குடும்பம் பெரிசு மெட்டு போன்ற கிராமபோன் சாரதாம்பாள் மெட்டு களை அள்ளிச் சொரிந்துவிட்டிருப்பது நடிகருக்கு பாட சர்வ சுலபமா யிருப்பதோடு ஸ்டேஜில் அவரைக் கண்டவிடத்து அவர் பாட்டை ஒவ் வொன்றாகக்கூறி, 'அதைப்பாடு, இதைப் பாடு' என்பார்க்கு சர்வ திருப்தியாக இருந்திருக்கும். பொதுவாக திருமதி சாரதாம்பாளின் வழக்கமான சங்கீத இன்பம் சினிமாவில் குறைபடாதிருப் பதில் எனக்கு திருப்தி.

நான் மனமாரக் கூறினால் சாரதாம் பாள் முதல் படத்திலேயே கொஞ்சம் வெற்றி யடைந்திருக்கிறார்.

### திரு. வி. எஸ். ஸ்ரீநிவாசன்

இவர் சாரங்கதானாக நடிக்கிறார். நாடக மேடையில் இவரைப் பார்த் திருப்பவர்கட்கு விசேஷமாக யாதும் கூறவேண்டுவதில்லை. நடிப்பைப்பற்றி யான் என்ன எழுதுவதென்று திகைக் கிறேன். படத்தில் இவர் நடிப்பை விட முக்கிய அங்கம் பெற்றிருப்பது பாட்டுத்தான். பாட்டில் எப்பொழு தும் அவரிடம் நாம் பார்க்கும் ரசம் படத்திலும் தெரிகிறது. சந்நியாசி களோடு சாரங்கதான் கூடியிருக்கு மிடத்தில் இவர் "கோடையிலே இளைப் பாற்றி" என்ற ராமலிங்கர் அருட் பாவைப் பாடுகிறார். பாடுகையில் திரு. கிட்டப்பா பிளேட்டில் அசல் காப்பி யொன்றைக் கொடுத்து விடுவது ஒரு முறையில் வேடிக்கையாகவும், இன் னொரு முறையில் வயிற்றெரிச்சலாகவும் இருக்கிறது. காபி அடிப்பதில் அவருக் கிருக்கும் திறமை நன்கு வெளிப்படு வதால் நாளடைவில் அபிவிருத்தியடை யலாமென்று எண்ணுகிறேன்.

### திரு. சேதுபதிப் பிள்ளை

கே. எஸ். சேதுப் பிள்ளை யென்பவர் நரேந்திரனாக நடிக்கிறார். இவர் பருவம் தோற்றம் எல்லாம் கிழ அரசனுக்குப் பொருத்தமே. கூடிய வரையில் நன்கு நடிக்கிறார். கோபத்தோடு பேசும்போது பல்லைக் கடித்து வார்த்தையை வெளியிடு வது போலிருக்கிறது. நான் சில தடவை பல் ஆட்டமோ அல்லது பொய்ப் பல்லோ இருக்கலாமோ வென்று சந்தேகித்தேன். ஆனால் உண்மை தெரியவில்லை. கோபத்தின் போது நடிப்பு இயற்கையானதாயில்லை. எனினும் இயன்றவரை நன்கு நடிக் கிறார். பாட்டைப் பொறுத்த வரையில் கிழவர் பாட்டுத்தானே; அதிகம் எழுத வேண்டியதில்லை. வயதினால் இவர் சாரங்கதானின் தந்தைக்குப் பொருத்த மானவ ரென்பது குறிப்பிட வேண்டி யது.

---

# ஊர்ச் செய்திகள்

"செல்வி"

### அட மதமே!

அலாகபாத் வாசியான ஜெ. எஸ். மெல்லர் என்ற ஆங்கிலோ இந்தியக் கனவான் சமீபத்தில் காலஞ் சென்றார். சென்றபோது தம் உடம்பை இந்து ஆசாரப்படி சுட்டு விடவேண்டுமென்று ஒரு உயிலில் குறிப்பிட்டார். அவ்வாறே இந்துக்கள் சிலர்கூடி சுட்டெரித்துவிட்டனர். ஆனால் சுட்ட சாம்பலை கிருஸ்தவர்கள் சிலர் கூடி, புதைத்து மார்க்கக் கடனை முடித்துக் கொண்டனர்.

இரு மதச் சடங்குகள் நடைபெற்றிருப்பதால், ஒன்றில் தவறினாலும் மற்றொன்றினாலேனும் நிச்சயமாக மோக்ஷம் புகுந்திருப்பார் இறந்து போன துரை.

* * *

### பதிலுக்கு பதில்?

யமுனா நதிக்கரையில் 9 வயதான ஒரு சிறுவனின் முகத்தை ஆமைகள் கடித்துத் தின்று போட்டிருந்ததைக் கண்டார்கள்.

இதுபோல் சிறுவர்கள் கடித்துத் தின்று போடப்படும் ஆமைகளையும் நதிக் கரைகளில் காணலாமல்லவா?

* * *

### நீதியின் ஒழுங்கு!

டெக்ஸாஸ் நகரத்து ஜில்லாக் கோர்ட்டில் ஒரு நீக்ரோவின் மீது கொண்டுவரப்பட்ட திருட்டுக் குற்றத்தில் நீதிபதி தீர்ப்பைப் படித்தபோது வாசித்ததாவது:—

'எதிரியாகிய நாங்கள், ஜூரி பன்றிருடியது உண்மையென்று காண்பதால், நான் சமஸ்தான சிறையில் இரண்டு வருடம் தண்டனை அநுபவிக்க வேண்டுமென்று தீர்ப்புக் கூறுகிறேன்.'

இந்தத் தீர்ப்பைக் கண்டதும் ஜூரர்கள் திகைத்துப் போயினர். பிறகு ஜட்ஜ் "எதிரி" "ஜூரி" என்ற பதங்கள் இரண்டும் இடம் மாறிக் கொண்டு விட்டனவென்று கத்தினார்.

நல்ல வேளை! வாசியாமல் தீர்ப்பை விட்டிருந்தால் சும்மா விருந்த ஜூரிகள் இரண்டு வருடம் சிறைசெல்ல வேண்டி வந்திருக்கும்.

* * *

டோராண்டோ அரச குமாரிகள் மிங்-டாய் என்ற பிரபல நடிகையை ஒரு வருடவிழா சம்பந்தமாகத் தருவித்திருந்தார்கள். மிங்-டாய் நடனமாடும்போது வெள்ளி ஆடை யொன்றைக் கட்டியிருக்கலாகாதென்று தடை செய்யப் பட்டாளாம். எனவே துணிச்சல் மிக்க அந் நடிகை வெள்ளி யாடை கட்ட சம்மதிக்கப்படாததற்காக நடனத்தின் கடைசியில் தம் அடி உடை வெளியே தெரியும்படியாக ஆடி முடித்து விட்டாள்.

இவளை மானங் கெட்டவளென்பதா; அல்லது நல்ல பாடம் கற்பித்தாளென்பதா?

* * *

### கம்பாசிட்டர்கள் பெருமை

சென்ற மாதம் அமெரிக்க ராணுவ அதிகாரியுடைய கையொப்பத்தோடு அடியில் வரும் உத்தரவு பிரசுரம் செய்யப்பட்டது:—

"விசேஷ உத்தரவு நெ. 82-ல் ஏப்ரல் 8, 1395 என்றிருப்பது ராணுவ அதிகாரியால் ஏப்ரல் 8, 1935 என்று திருத்தப்பட்டிருக்கிறது.

சுமார் 600 வருடங்களை ஒரே யடியில் குறைத்துவிட்ட கம்பாசிட்டர்கட்கு ஓர் நல்ல விளம்பரம்!

* * *

### 2000 பிரசங்கம்

இந்தியா மசோதா பார்லிமெண்டில் நிறைவேறுவதற்கு 2000 பிரசங்கங்கள் செய்யப்பட்டனவாம். 15 லட்சம் வார்த்தைகளும் பேசப்பட்டனவாம்.

அடடா! எவ்வளவு கஷ்டப்பட்டிருக்கிறார்கள் வெள்ளைக்காரர்கள் இந்தியருக்காக!

அவர்களைவிட கஷ்டப்பட்டிருக்கிறாரோ பிரசங்கங்களையும் வார்த்தைகளையும் கணக்குப் போட்ட மகான்!

* * *

### மானம் தங்கிற்று!

பண்டித மாளவியாஜீ தேசியக்கட்சியின் சார்பாக இங்கிலாந்துக்குத் தூது போக நினைத்திருந்த நினைப்பு கடைசியாகக் கைவிடப்பட்டு விட்டது.

—ஒரு செய்தி.

நல்லவேளை! அவர் மானம் தங்கிற்று! இப்படிச் சொல்வதா அல்லது கொஞ்சம் களிமண்ணும் கங்கா ஜலமும் கப்பலேறாது பிழைத்தன என்பதா?

* * *

### ஆள்க பிரிட்டானியா "ஆழ்க"

" ஆள்க பிரிட்டானியா!
பிரிட்டானிய கடலை ஆள்க"

என்று தொடங்கும் பாட்டொன்றை ஆங்கிலேயர் பெருமையாகப் பாடி பல வருடங்களாகத் தங்களை சிறப்பித்துக் கொண்டிருந்தார்கள். ஆனால் சமீபத்தில் (ஜூபிலியை யொட்டி) அமெரிக்கர்கள், அவ்விதம் பாடுவது தங்கட்கு கடலிலுள்ள ஆதிக்கத்தை இழிவுபடுத்துவதாகுமென்று கருதி அப்பாட்டைப் பாடலாகாதென்று தடைசெய்து விட்டனர்.

பிரிட்டன் தம் சரக்கு நெடுநாள் விலைப் போகுமென்று நினைக்கவேண்டாமென்பதற்கு இது ஒரு நல்ல உதாரணம். ஆள்க பிரிட்டானியா வென்பது 'ஆழ்க' ஆகிவிட்டது.





# செய்தித் திரட்டு

சென்னையில் வெயில் சென்ற பல நாட்களாக அதிகரித்திருந்து மேமீ 29உ சுமார் 108 டிக்கிரியாக இருந்தது.

* * *

ஜெர்மன் ராணுவ ரகசியத்தை வெளியிட்ட டஸ்ஸெல்டார்ப் வாசியான வில் ஹெம்குரூர் மே மாதம் 23ந் தேதி சிரச்சேதம் செய்யப்பட்டாரென தெரிகிறது.

* * *

இந்திய மசோதா சில மாதங்களில் நிறைவேறினாலும் 1937-ம் வருஷ ஆரம்பத்தில்தான் மாகாண சட்டசபைகள் ஏற்படுமெனத் தெரிகிறது.

* * *

டாக்டர் சாப்ரூ இங்கிலாந்திலிருந்து திரும்புகையில் கவர்னராகவோ சுப்ரீம் கோர்ட் தலைவராகவோ வரக் கூடுமென அலகாபாத் செய்தி ஒன்று கூறுகிறது.

* * *

தாராபுரத்தில் ஒரு வாரமாக தண்ணீர்க் கஷ்டம் அதிகரித்து சமீபத்திலுள்ள அமராவதி நதியிலிருந்து பீப்பாயில் தண்ணீர் கொண்டுவந்து அணை ஒன்றுக்கு ஒரு குடம் விகிதம் விற்கப்படுவதாகத் தெரிகிறது.

* * *

காச்சியில் சென்ற மார்ச்சு மாதத்தில் நடந்த துப்பாக்கிப் பிரயோகத்தில் மாண்டவர்களின் குடும்பங்களுக்கு கஷ்ட நிவாரண மளிக்க பம்பாய் கவர்னர் ரூ. 5000 நன்கொடை யளித்துள்ளார் என்று தெரிகிறது.

* * *

பர்மாவில் மொத்தம் மூன்றரை கோடி பேர்களுக்கு ஓட்டுரிமை அளித்திருப்பதாகவும் அறுபது லட்சம் பெண் வாக்காளர்கள் இருக்கின்றார்களென்றும் திரு. ஆர். ஏ. பட்லர் பேச்சிலிருந்து விளங்குகிறது.

* * *

இந்திய சாரணர்கள் ஜப்பான் சாரணர்களுக்கு இரண்டு யானைகள் மாவுத்தர்களோடு அனுப்பி யிருக்கிறதாகவும் யானைகளை புதிய தேசத்தின் வாழ்க்கைக்கு பழக்குவதற்காக 6 மாதம் வரை தங்குகிறார்களெனவும் தெரிகிறது.

* * *

லால்கஞ்சில் மே மாதம் 28ந் தேதி கிணற்று வேலை செய்ய இறங்கிய மூன்று தொழிலாளர்கள் கிணற்றிலிருந்து வெளிப்பட்ட விஷ வாய்வு சம்பந்தமாய் இறங்கிய கொஞ்ச நேரத்திற்குள் இறந்து போய் விட்டதாக செய்தி.

* * *

சிம்லாவிலிருக்கிற இந்திய சர்க்காரின் இராணுவத் தலைமை காரியாலய அதிகாரிகள் பம்பாய் மோட்டார் கம்பெனிக்காரர்களுடன் யுத்த சமயத்திற்கு நூற்றுக்கணக்கான லாரிகள் சப்ளைசெய்ய. கேட்டுக் கொண்டதாகவும் எல்லா மோட்டார் கம்பெனிகளிலிருந்தும் டெண்டர்கள் அனுப்பப்பட்டதாகவும் ஜெர்மன் டெண்டர்களைத் தவிர பிரிட்டிஷ் அமெரிக்கா முதலிய தேசக் கார்களையே வாங்குவதாக இந்திய சர்க்கார் முடிவு செய்திருக்கிறதாக தெரிய வருகிறது.

* * *

ஜாதிமத பேதங்களன்றி குடியிருப்பு ஸ்தலம் இல்லாமல் தவிக்கும் ஏழியர்களில் ஆயிரம் நபர்களுக்கு வீடு கட்டிக் கொள்ள இலவசமாக இடம் வழங்குவதாக கொச்சி அரசர் மேமீ 6-ந் தேதி நடந்த வெள்ளி விழா வைபத்தில் தீர்மானித்திருப்பதாகத் தெரிகிறது.

* * *

நூதன வழியில் பிரஜா உற்பத்தி கட்டுப்பாட்டுக்கு வகை தேட டில்லியில் மத்திய இடத்தில் கர்ப்பத்தடை போதனாசாலை ஒன்று ஏற்படுத்தி பரீட்சிக்க வேண்டுமென டில்லி முனிசிபல் சபையில் தீர்மானம் கொண்டு வருவார்களென சொல்லப்படுகிறது.

* * *

போலீஸார் மேக்தில்லா ஜில்லாவில் இரு பர்மிய டாக்டர்களை கைது செய்திருக்கின்றனர். குண்டுகளாலும், கத்திக் குத்தாலும் தீங்கு நேரிடா வண்ணம் சில கிராம வாசிகளுக்கு இவர்கள் பச்சை குத்தியதாகச் சொல்லப்படுகிறது. பச்சை குத்துவதற்கான சாதனங்களும் இவர்களிடமிருந்து கைப்பற்றப் பட்டிருக்கிறதாக வதந்தி.

* * *

பாத்வான் ஜில்லா செஷன்ஸ் ஜட்ஜ் மே மீ 28உ வக்கீல்கள் தமது எஜ்லாஸின் வக்கீல்கள் பகலில் உறங்குவதற்கு தகுந்த இடமாகக் கருதுவதாக அபிப்பிராயப்பட்டு, அதுவலிருந்தாலொழிய அதற்குள் வக்கீல்கள் வரக்கூடாதென்று உத்திரவிட்டு 29 தேதி முதல் அமுலுக்கு வந்திருக்கிறது. இந்த அனாவசியமான உத்திரவை ஆட்சேபிக்கக் கூட்டம் கூடுமென்று தெரிகிறது.

* * *

போர்சாத் தாலுகாவிலுள்ள பீலைக் பிரதேசத்திலுள்ள வாஹிரா கிராமத்தில் மே மீ 27உ ஒரு பொதுக்கூட்டத்தில் காந்திஜீ "என் போன்ற அஹிம்சா தர்மவாதி எலியைக் கொல்லுவது கூடாதென்ற உணர்ச்சி கொள்ளுவர்" என்றும், எலிகள் பெருகுவதற்கு விடக்கூடாதென்றும் சுகாதார விதிகளை கண்டிப்பான முறையில் அனுஷ்டிக்க வேண்டும் என்றும் பிரசங்கித்ததாகத் தெரியப்படுகிறது.

* * *




### செட்டியார்கள் நடப்பு வட்டி.

| மாதம் | தேதி | சென்னை | இரங்கூன் | பினாங்கு | சிங்கப்பூர் |
|---|---|---|---|---|---|
| பவஷூ | | | | | |
| சித்திரை | 31 | 0—8—0 | 0—4—6 | 0—5—6 | 0—5—3 |
| வைகாசி | 32 | 0—7—6 | 0—4—6 | 0 5—3 | 0—5—3 |
| ஆனி | 31 | 0—7—0 | 0—4—0 | 0—5—0 | 0—5—3 |
| ஆடி | 32 | 0—6—6 | 0—4—0 | 0—4—6 | 0—5—3 |
| ஆவணி | 31 | 0—6—0 | 0—4—0 | 0—4—6 | 0—5—3 |
| புரட்டாதி | 30 | 0—6—0 | 0—4—0 | 0—4—0 | 0—4—9 |
| ஐப்பசி | 30 | 0—6—6 | 0—4—0 | 0—4—0 | 0—4—6 |
| கார்த்திகை | 30 | 0—7—0 | 0—4—0 | 0—4—0 | 0—4—3 |
| மார்கழி | 29 | 0—6—6 | 0—4—6 | 0—4—0 | 0—4—3 |
| தை | 29 | 0—7—0 | 0—5—0 | 0—4—0 | |
| மாசி | 30 | 0—7—0 | 0—5—0 | 0—4—0 | |
| பங்குனி | 31 | 0—8—0 | 0—4—6 | 0—4—0 | |

### வட்டி விகிதம்

இம்பீரியல் பாங்க்:—மூன்றரை பெர் [செண்டு.

இங்கிலாந்து பாங்க்:—இரண்டு பெர் [செண்டு.

இரங்கூன் தவணை வட்டி.

புவ பங்குனி 10உ 0—4—0

சிங்கப்பூர் நடப்பு வட்டி

பவ கார்த்திகை 0—4—3

சிங்கப்பூர் 3மீ தவணை வட்டி.

மார்கழி 16உ 0—3—9

கொழும்பு நடப்பு வட்டி.

1935 மார்ச் 0—6—0

பினாங்கு 3மீ தவணை வட்டி.

பவ தை 17உ 0—3—6

நடப்பு வட்டி

பவ தை 0—4—0

---

### ஊண்டியல் விலை

ஸ்டெர்லிங் விற்பனை 157¼

,, 30 நாள் தவணை வாங்குவது 150

### செய்கோன்

சித்திரை நடப்பு வட்டி 0—4—0

,, தவணை வட்டி 0—4—0

---

### ரப்பர்

லண்டன், மே, 28உ

லண்டன் ஷீட் ஸ்பாட் ரப்பர் விலை

வாங்குவோர் பவுன் 1-க்கு 6 பென்ஸ்.

விற்பவர் 6 1/16 பென்ஸ்.

---

### தங்கம், வெள்ளி

சென்னை, மே, 29உ

சவரன் (சில்லரை) 22-12—0

,, மொத்தமாக 22-11—9

ஆலைத்தங்கம் தோலா 1-க்கு 34-15—6

மூனா தங்கம் ,, 34—9—0

வெள்ளி மொத்த விலை

100 ரூபா எடைக்கு 78-12—0

1 ரூபா எடைக்கு 0—13—0

### கப்பல்

---

— ரங்கூன் —

எரின்புரா:—ஜூன் 3ந் தேதி வந்து 7-ந் தேதி புறப்படும்.

தலம்பா:—ஜூன் 10-ந் தேதி வந்து 14-ந் தேதி புறப்படும்.

எரின்புரா:—ஜூன் 17-ந் தேதி வந்து 21-ந் தேதி புறப்படும்.

வெள்ளிக்கிழமை தோறும் ரங்கூனுக்கு மெயில் கொண்டு போகப்படும்.

மலேயா

ரோனு:—ஜூன் 1-ந் தேதி வந்து 4-ந் தேதி புறப்படும்.

ரஜுலா:—ஜூன் 15-ந் தேதி வந்து 18-ந் தேதி புறப்படும்.

ரோனு:—ஜூன் 29-ந் தேதி வந்து ஜூலை 2-ந் தேதி புறப்படும்.

பாண்டிச்சேரி, சிங்கப்பூர், செய்கோன்

மேட்ஜிங்கர்:—ஜூன் 11-ந்உ வரும்.

ஆங்கர்ஸ்: ஜூலை 9-ந்தேதி வரும்.

---

P. & O. மெயில் கப்பல்கள்

கொழும்பிலிருந்து பினாங்குக்குப் புறப்படும் தேதி வருமாறு:—

எஸ். எஸ். கார்தேஜ் 2—6—35

---

Printed and published by Rama Kasinathan for the India Publications Ltd., at the Oolian Power Press, 56, Thambu Chetty Street, Madras.

